# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 16 Issue 08 March 2022 Rs.25
ஆண்டு 16 இதழ் 08 மார்ச் 2022 ரூ.25

## திருவாசக நினைவுகள்

**சந்தியா நடராஜன்**

## புனைவுலகம்: கிழக்கும் மேற்கும்

**நாகரத்தினம் கிருஷ்ணா**

## நேர்காணல்

**அஸ்கர் ஃபேர்ஹாதி**

## சிறுகதை

**ஜெகந்நாத் நடராஜன்**
**கன்பரா யோகன்**

## கவிதை

**வ.ஐ.ச. ஜெயபாலன்**
**த. அரவிந்தன்**
**லாவண்யா சுந்தர்ராஜன்**



ஆண்டு 16 இதழ் 8

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

மார்ச்-2022 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவிசுப்பிரமணியன்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...



அட்டைப் படம்:
தாமஸ் டேனியல்,
மதுரை கோட்டை
*1797*

# தமிழ்நாட்டில் அழியும் நிலையில் வனவிலங்குகள்!

பிரபு திலக்

**உணவுமற்றும்சுற்றுச்சூழல்சமநிலைக்குகாடுகள்மற்றும்அங்குவாழும்உயிரினங்களின் பங்கு அளப்பரியது என்றாலும், அவற்றின் நிலை இன்று கவலைக்குரியதாக உள்ளது. 1970ஆம் ஆண்டுக்குப் பிறகு காட்டுயிரிகளின் எண்ணிக்கை 60 விழுக்காடு அளவுக்கு குறைந்துள்ளதாக சமீபத்தில் வெளியான ஆய்வுகள் தெரிவிக்கின்றன.**

“ஜுராசிக் பார்க் படம் பார்த்துக் கொண்டிருந்தோம். டைனோசர் மனிதர்களை விரட்டி, விரட்டிக் கொல்வதைப் பார்த்து என் மகள் பயந்து நடுங்கினாள். ‘இந்த வகைப் பிராணிகள் இப்போது இல்லை. அழிந்துபோய்விட்டன’ என்றேன். ‘அப்பாடா... நாம தப்பிச்சம். இதுவெல்லாம் உயிரோட இருந்திருந்தா நம்ம மாதிரி மனுசங்களுக்கு எவ்வளவு தொல்லை’ என்று பெருமூச்செறிந்தாள். என் மகள் மட்டுமல்ல எல்லோருமே இப்படித்தான் நினைக்கிறோம்’’ என்கிறார், எழுத்தாளர் சுப்ரபாரதிமணியன்!

இந்தப் பயத்தில்தான் பாம்பு தொடங்கிச் சிறு வகைப் பூச்சிகள் வரை எதையாவது கண்டுவிட்டால், உடனே அவற்றை அடித்துத் துவம்சம் செய்துவிடுகிறோம். ஆனால், நம் பயம் உண்மையானதுதானா? வீடு தொடங்கிக் காடு வரைக்கும் மனிதனின் ஆட்சிப் பரப்பு விரிந்ததன் விளைவு, இன்று உலகில் 56,441 வனவிலங்குகள் அழிவின் விளிம்பில் உள்ளதாக ஐ.நா.வின் உலகச் சுற்றுச்சூழல் அமைப்பு தெரிவிக்கிறது.

உலகின் மொத்தப் பரப்பில் இந்தியாவின் நிலபரப்பு 2 சதவிகிதம்தான். ஆனால், 8 சதவிகித வன உயிரிகள் இந்தியாவில் காணப்படுகின்றன. இதனால், உலகில் மிகப் பெரிய பல்லுயிர் பெருக்க நாடுகள் என அடையாளம் காணப்பட்டுள்ள 12 நாடுகளில் இந்தியாவும் ஒன்றாக உள்ளது. 89,450ற்கும் மேற்பட்ட உயிரினங்களும் 47,000ற்கும் மேற்பட்ட தாவர வகைகளும் இந்தியாவில் உள்ளன.

காடுகள் பரப்பளவில் தமிழ்நாடு இந்திய மாநிலங்களில் 13வது இடத்தில் இருக்கிறது. வனக் கணக்கெடுப்பு 2003இன் படி தமிழ்நாட்டில் 22643 கி.மீ. காடுகள் உள்ளது. இது தமிழ்நாட்டின் மொத்த நிலபரப்பில் 17.41 சதவிகிதம்.

தமிழ்நாட்டின் பெரும்பகுதி காடுகள் என்பது குமரி முனைக்கு அருகிலிருக்கும் ஆரல்வாய்மொழிக் கணவாயிலிருந்து, முதுமலை வரை நீண்டிருக்கும் மேற்குத் தொடர்ச்சி மலைத் தொடரில்தான் இருக்கின்றன. மாநிலத்திலுள்ள பத்து காட்டுயிர் சரணாலயங்களில் முக்கியமான ஆறு சரணாலயங்கள், இந்தக் காடுகளில்தான் அமைந்துள்ளன. இந்த மலைத்தொடரின் அடிவாரத்தில் புதர்க் காடுகளும், மற்ற இடங்களில் இலையுதிர் காடுகளும், உயர் பகுதியில் மழைக்காடுகளும் அவற்றையொட்டி ஆங்காங்கே புல்வெளிப் பகுதிகளும் உள்ளன. .

இப்புவியில் தாவரங்கள், பறவைகள், பாலூட்டிகள், பூச்சிகள், புழுக்கள், நீர்நில வாழ்விகள் எனப் பெரும்பாலான உயிரினங்கள் மிக அடர்த்தியாக உள்ள வாழிடம் பல்லுயிரிய சொர்க்கமான இம்மழைக்காடுகள் தாம். உலகிலேயே பல்லுயிரியம் அடர்த்தியாக உள்ள பதினெட்டு இடங்களில் மேற்குத் தொடர்ச்சி மலைத்தொடரும் ஒன்று.

மேற்குத் தொடர்ச்சி மலைத் தொடர் தவிர, கிழக்குத் தொடர்ச்சி மலைத் தொடரின் சில பகுதிகளும் தமிழ்நாட்டிலுள்ளன. ஆனால், இவை ஒரே தொடர்ச்சியாக இல்லாமல் பிரிந்து பிரிந்து இருக்கின்றன. சேலம் மாவட்டத்தில் சேர்வராயன் மலை, வேலூர் மாவட்டத்தில் ஜவ்வாது மலை, நாமக்கல் மாவட்டத்தில் கொல்லி மலை போன்றவை அவற்றில் சில.

மேற்குத்தொடர்ச்சி மலையும் கிழக்குத்தொடர்ச்சி மலையும் தமிழ்நாட்டின் பெரும் செல்வம். ஆனால், இவற்றின் மதிப்பை நாம் அறியாததன் விளைவு, எண்ணிக்கையிலடங்காத பல உயிரினங்களும் தாவரங்களும் ஏற்கெனவே அழிந்துவிட்டன. எஞ்சியிருப்பவற்றிலும் அதிகமானவை தொடர்ந்து அழிவுக்கு உள்ளாகிவருவதாகக் கணக்கிடப்பட்டுள்ளது.



உலகளவில் இந்தியாவில் 4850 வன விலங்குகளும் 2119 தாவரங்களும் அழிவின் விளிம்பில் உள்ளதாகக் கண்டறியப்பட்டுள்ளன. அரணை, பறக்கும் அணில், புதுச்சேரி சுறா, இந்திய கழுகு, ராமேசுவரம் பாராசூட் சிலந்தி, குள்ள

பன்றி, கொடி நாகம், இந்திய நீர் எருமை, குரைக்கும் மான், பச்சை ஆமை, ஆசியா யானை, ஆசியா காட்டுநாய், களக்காடு பாறை கெண்டை மீன், இந்திய எறும்புத் திண்ணி, சிறுத்தை, நீலகிரி பைபட், ஆசியா சிங்கம், புலி, வரையாடு, சோலைமந்தி, காட்டுப் பல்லி உள்ளிட்ட விலங்குகள் அழிவின் விளிம்பில் உள்ளதாக அடையாளப்படுத்தப்பட்டுள்ளன.

இதில், வரையாடுகள் தமிழ்நாட்டின் மாநில விலங்கு. உலகிலேயே மேற்குத் தொடர்ச்சி மலையில் தமிழ்நாட்டு, கேரள வனப் பகுதியில் மட்டுமே வரையாடுகள் காணப்படுகின்றன. பயந்த சுபாவம் கொண்ட இவை மனிதர்கள், மற்ற வனவிலங்குகள் எளிதில் நெருங்க முடியாத நிலையில் 1,200 முதல் 2,500 மீட்டர் வரை உயரமான செங்குத்தான பாறைகளில் வசிக்கின்றன. வனவிலங்குகள் கணக்கெடுப்பில், தமிழ்நாட்டில் 2,500 வரையாடுகள் வரை இருப்பதாகக் கண்டறியப்பட்டுள்ளது.

இது ஒருபக்கம் இருக்க, இந்தக் கணக்குக்குள் வராத பல ஆயிரம் சிற்றுயிர்களும்கூட அழியும் நிலையில் உள்ளன என்பதும் கவனத்துக்குரியது. பொதுவாகப் பெரிய விலங்கினங்கள்தான் நம் கவனத்துக்கு வருவதுபோல் இவை வருவதில்லை.

வன உயிர்கள் அழிய முதல் காரணம் அவற்றின் வாழிடமான காடுகள் அழிக்கப்படுவதுதான். ஒரு பகுதியில் சுற்றுச்சூழல் சமன்நிலையைப் பராமரிக்க 33 சதவிகிதம் காடு இருக்க வேண்டும் என்பது நியதி. ஆனால், தமிழ்நாட்டின் நிலப்பரப்பில் 17.5 சதவிகிதம்தான் காடு. நூறாண்டுகளுக்கு முன் காவிரிக் கரையிலிருந்த காடுகள் இன்று இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டன.

இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு, காடுகளை அழித்துச் சாலை அமைத்தல், அணை கட்டுதல், தொழிற்சாலைகள் அமைத்தல், காடுகளில் பயிரிடுதல் போன்ற செயல்களால் 4,696 மில்லியன் ஹெக்டேருக்கும் மேலான காடுகள் அழிக்கப்பட்டுள்ளன என்கிறது புள்ளி விபரம்.

பொதுவாக ஒரு மழைக்காட்டில், மரங்களின் உச்சியில் வாழும் உயிரனங்களின் வகை மட்டும் 14 லட்சத்துக்கும் மேலே இருக்கும். பறக்கும் பாம்பு, பறக்கும் தவளை போன்றவை இந்த வகையைச் சேர்ந்தவைதான். காடு துண்டாடப்படும்போது இவற்றில் பெரும்பகுதி பாதிக்கப்படும். மேலும், தவளையினங்கள் போன்ற நீண்ட தூரம் வலசை போக முடியாத உயிரினங்கள் அனைத்துமே காடுகள் அழிவுடன் சேர்ந்து அழிவுக்குத் தள்ளப்படுகின்றன.

மற்றொரு காரணம் விலங்குகளின் தோல், உரோமம், தந்தம், கொம்பு, மற்றும் மாமிசம் போன்ற தேவைகளுக்காக வேட்டையாடப்படுவது. சோலைமந்தி எனப்படும் சிங்கவால் குரங்கு மழைக்காட்டில் மரத்தின் உச்சியிலேயே இருக்கும். நெடிதுயர்ந்த மரங்களின் விதானத்திலேயே இது தங்களுக்குத் தேவையான இரைகளைத் தேடிக்கொள்ளும். வெகு அரிதாகவே தரைக்கு வரும். இவற்றின் வாழிடமான மழைக்காடுகள் பெருமளவில் அழிக்கப்பட்டதன் விளைவு இவற்றுக்கு உறைவிடம் இல்லாமல் போனது. இன்னொரு பக்கம் நாட்டு வைத்தியத்துக்காகவும் தோலுக்காகவும் சோலைமந்திகள் சகட்டுமேனிக்குக் கொல்லப்பட்டன. இன்று ஆனைமலை, களக்காடு சரணாலயங்களில் சோலைமந்திகள் அழிவின் விளிம்பில் உயிரைக் கையில் பிடித்துகொண்டு பிழைத்திருக்கின்றன. இதுபோல் நீண்ட வால் கொண்ட கருமந்தியும் நாட்டு மருந்துக்காகப் பெருமளவில் கொல்லபட்டதில் இன்று மிகவும் அரிதாகிவிட்டன.

மந்தைகளாக வாழும் வரையாடுகளை அதன் இறைச்சிக்காக வேட்டையாடினார்கள். சாகச வேட்டையாடிகளுக்கு வரையாட்டைச் சுடுவது பெருமை தரும் ஒரு காரியமாக இருந்தது. அதிலும் முதுகில் பழுப்பு வெள்ளைப் பரப்புக் கொண்ட முதிர்ந்த ஆண் வரையாட்டைச் சுடுவது கூடுதல் முக்கியத்துவம் பெற்றது. இதன்விளைவு இவற்றின் எண்ணிக்கை மிகவும் குறைந்து, ஏறக்குறைய அற்றுப்போகும் நிலைக்கு வந்துவிட்டன. இன்றும் வரையாடுகள் திருட்டு வேட்டைக்குப் பலியாகின்றன.

விலங்கினங்களும் பறவைகளும் இயற்கையைச் சமச்சீராக வைத்திருக்க உதவுபவை. காற்று, நீர், நிலம், மரங்கள் முதல் நுண்ணுயிரி வரை அனைத்தும் சூழல் அமைப்பின் அங்கம்தான். இந்த அங்கங்கள் அனைத்தும் ஒன்றி இருப்பதே ஆரோக்கியமான சூழல் எனக் கருதப்படுகிறது. காடுகள் அழிக்கப்படுவதன் காரணமாக இயற்கை பேரழிவுகளைத் தந்து கொண்டிருப்பதைச் சமீப வருடங்களில் புயல், வறட்சி, தண்ணீர் தட்டுப்பாடு, பூகம்பம், கடுமையான வெயில் போன்ற பிரச்சனைகளாக உணர்கிறோம்.

மண்ணின் உப்பு தன்மையைக் குறைத்தல், கழிவுகளைப் பதப்படுத்தி சக்தியை வெளியேற்றுதல், ஆற்றல், கரியமில வாயுவை உட்கொண்டு மற்ற வளி மண்டல வாயுக்களைச் சமன்படுத்தல், சீதோஷ்ண நிலைமை ஸ்திரப்படுத்தி அதில் ஏற்படும் மாற்றங்களைக் குறைத்தல், காற்று மற்றும் நீரின் தரத்தை மேம்படுத்துதல், வெள்ளம் மற்றும் வறட்சியைக் கட்டுப்படுத்தல் எனத் தாவரயினங்களும் உயிரினங்களும் நாம் நிம்மதியாக வாழ உதவுகின்றன.

உதாரணமாக நீலகிரி மலையில் வசிக்கிற இருவாசிப் பறவை அழிந்தால், அதோடு தொடர்புடைய பத்து வகையான மரங்களும் அழிந்துவிடும். காரணம், இருவாசிப் பறவை சாப்பிட்டு வெளியேற்றுகிற விதைகளுக்குத்தான் முளைக்கும் திறன் இருக்கிறது. அதனாலதான் மரங்கள் செழித்து வளர்கிறது. இப்படி நம்மைச் சுற்றியிருக்கிற பல்லுயிர்களும் செழிப்பாக இருந்தால்தான் நாமும் செழிப்பாக இருக்க முடியும்.

வனவிலங்குகளைப் பாதுகாப்பது என்பது நம் கல்வித்துறை சார்ந்த பாடத் திட்டங்களிலிருந்தே ஆரம்பிக்கப்பட வேண்டும். வனவிலங்குகள் ஆபத்தானவை என்ற தவறான கருத்துகளை மாற்றி, அவை நமக்கு மிகவும் நெருக்கமானது என்பதைக் குழந்தைகளுக்கு உணர்த்த வேண்டும். இதற்குச் சலீம் அலி, தியடோர் பாஸ்கரன், ச.முகமது அலி போன்றோரின் படைப்புகள் நிச்சயம் வழிகாட்டும். ●

# கொண்டாட்டமே வாழ்வு



வ.ஐ.ச. ஜெயபாலன்

பருதியோடு எழுகவென பாடி
பல்லுயிர்கள் கொண்டாடும் அதிகாலை.
பூப்படைகிற முல்லை
என் படுக்கை அறையுள் நுழைகிறாளா?.

●

எல்லோரும் வாழ்வோம் என்றபடி
சன்னலைத் திறந்தேன்.
கரு முகில் அபாயா அணிந்த
நம் முழுநிலவின் புன்சிரிப்பில்
விடிகிறது வாழ்வு

●

என் சின்ன வயசு முழுவதும்
முக்காடிட்ட சோனக மாமிகள் தந்த
அறியப்படாத சிற்றுண்டிகளின்
தேன் கமழ்ந்தது.

●

வளர் இளம் பருவத்தில்
அபாயா அணிந்த அன்னை மேரியும்
அம்மனும் ஒன்றென நம்பினேன்.
வாழ்வு பலவண்ன உறவுகளின்
வானவில் என்பதை எப்படி மறந்தோம்?

●

மா முனிவன் ராமானுஜன்
அபாயாவுடன் துலுக்க நாச்சியாரை
போற்றிப் பணிந்த மண்ணே வாழிய.

●

வண்ண வண்ண கியாப் அணிந்து
காடு வளர்க்கும் பறவைகளால்
உயிர்த்திருக்கிறது நம் உலகு.

●

நம் மணல்கடிகை ஓயாமல் ஒழுகுகிறது.
மதுக்கடை அடைக்கப்போகிறார்கள் என
யாரோ பாரசீக மொழியில் பாடுகிறார்கள்.
பூசலற்ற நிகழ்காலம் மட்டுமே நமது.
வருக கொண்டாட்டத்தை ஆரம்பிப்போம்.

**வ.ஐ.ச. ஜெயபாலன்** <visjayapalan@mail.com>

# எல்லைப்புற இராணுவம்

விட்டல் ராவ்

**இங்குதான் டானியல்களின் ஓவிய 'பிரிண்ட்'கள் அடங்கிய அற்புதமான டானியல்காலரியைச்சுற்றிப்பார்த்தேன்.தமிழக்கோட்டைகள்சிலதையும், கோயில்கள்,மாளிகைகள்,மகாபலிபுரக்காட்சிகள்என்றுதாமஸ்டானியல் 1780களில் செய்திருக்கும் வியத்தகு வண்ண பதிப்போவியங்களையும் பார்த்தேன். அவற்றின் பாதிப்பாலும் டானியல்கள் ஓவியம் செய்ய மேற்கொண்ட கடினமான பயணங்களை அறிந்த ஆர்வத்தாலும் தான் எனது ஆய்வு ரீதியான 'தமிழக் கோட்டைகள்', நூலை எழுதி முடிக்க முடிந்தது.**

*தொலைப்பேசி அலுவலக அறிவிப்புப் பலகை* (Notice Board) *ஊழியர்களின் அன்றாட கவனத்தை ஈர்க்கும் விதமாய், பணியிடத்துக்குள் நுழையும் வாசல் பக்கமாகவே சுவரில் மாட்டப்பட்டிருக்கும். சாதகமான - பாதகமான விஷய அறிவிப்புகளை ஏந்தி வரும் நானாவித இலாகா அறிவிப்புகளும் அறிக்கைகளும், ஒரு முறை உள்ளே அவ்வந்தப் பகுதிகளைச் சுற்றி வலம் வந்துவிட்டு, இந்த கண்ணாடி சட்டமிட்ட கூண்டுக்குள் பார்வைக்கென குத்தி வைக்கப்பட்டிருக்கும். ஆங்கிலம் தெரியாத கடைநிலை ஊழியர்கள், "இன்னா சார் நோட்டீசு, படிச்சி சொல்லு சார்", என்று கேட்பார்கள். அந்த நோட்டீஸ் போர்டுக்கு பக்கத்திலேயே தொழிற்சங்கத்தின் அறிவிப்புப் பலகையும் இருக்கும். அன்று மாலை அறிவிப்பு பலகைக்கு வந்திருந்த மிக முக்கிய சுற்றறிக்கை எல்லோர் கவனத்தையும் ஈர்த்தது.*

*"எல்லைப்புற இராணுவப் பயிற்சிக்கு" விருப்பமுள்ள தன்னார்வலர்களை வரவேற்கும் விவரம் கொண்ட சுற்றறிக்கை அது.*



*"டெர்ரிடோரியல் ஆர்மிக்கு வாலண்டியர்ஸை கேட்டிருக்காங்க. யாராருக்கு போறதுக்கு விருப்பம்?" என்று கேட்டுக்கொண்டே எங்கள் பணியிடத்துக்குள் நுழைந்தான் 'கில்லாடி' கிருஷ்ணன். அவன் சாகசமயமானவன் என்பதால் 'கில்லாடி' எனப் பட்டப்பெயர் கொண்டவன். இத்தொடரில் வரவிருக்கும் பகுதிகளில் அவனது சாகசங்களைப் பின்னர் பார்க்கலாம். அவன் சென்ற ஆண்டும் இராணுவப் பயிற்சிக்குப் போய்விட்டு வந்திருப்பவன். 1963இல் எல்லைப்புற இராணுவப் பயிற்சி* (Territorial Army Traning) *தொலைப்பேசி ஊழியர்களுக்கு தரத் தொடங்கப்பட்டது. முன் அனுபவக் கர்வம். அந்த பலத்தில் எதையும் தூக்கியெறிந்து பேசுவான்.*

*பிரதமர் நேரு காலமான சமயம் அது. எல்லைப் பகுதியில் பாதுகாப்பு விஷயத்தை பலப்படுத்தும் பல விஷயங்களில், சிறு விஷயமென்றாலும் முக்கியமானதொன்றாகக் கருதப்பட்ட திட்டங்களில் ஒன்று 'டெர்ரிடோரியல் ஆர்மி' என்பது. இந்த உப ராணுவப் படையில், 'செய்தி போக்குவரத்து மற்றும் சிக்னல் அமைப்பும் தொடர்பும்' என்ற வகையில் தொலைப்பேசி ஊழியர்கள் தேர்வு செய்யப்பட்டு கல்கத்தா இராணுவ முகாமுக்கு ஒரு மாதகால பயிற்சிக்கு அனுப்பப்பட்டு வந்தனர். அடுத்தடுத்த ஆண்டுகளிலும் விருப்பமிருந்தால் போய் வரலாம். ஒரு மாத இராணுவ பயிற்சியின் போது, தொலைப்பேசி பணியில் வாங்கும் சம்பளத்தைத் தவிர கூடுதல் ஒரு மாதம் சம்பளமும் அளிக்கப்பட்டு வந்தது. பின்னாட்களில் அப்பயிற்சிக்கு போய்விட்டு வருபவர்களின் வீடுகளுக்கு*



தாமஸ் டேனியல் (1749 - 1840): பெரிய காளை, இந்து சிலை, தஞ்சை, ஜூலை 1798

இலவச தொலைப்பேசி இணைப்பும் வழங்கப்பட்டது. அப்பயிற்சிக்கு ஓரளவுக்கு உடற்கட்டும், என்.சி.சி. பயிற்சி அனுபவமும் என்.சி.சி. சான்றிதழும் அவசியம். 'டெர்ரியோரியல் ஆர்மி' பயிற்சி சற்று கடுமையானது. கராரான இராணுவக் கட்டுப்பாடும் கரடு முரடான இராணுவப் பயிற்சியும் சும்மாயில்லை. என்.சி.சி. பயிற்சியில் பெற்ற - கற்ற இராணுவ சமாச்சாரங்கள் அரிச்சுவடியளவுக்கு மட்டுமே. இது பக்கா இராணுவ முகாம். முட்டி தேய்ந்து காப்பு காய்ந்து விடும்.

தேனாம்பேட்டையிலிருந்த,'பிராந்திய இராணுவ ஆள் சேகரிப்பு மையம்' (Regional Recruitment centre) எனுமிடத்தில் நாங்கள் நூற்றுச் சொச்சம் பேர் சென்னைத் தொலைப்பேசியிலிருந்து தேர்வுக்கு போயிருந்தோம். அறுபது பேரைத் தேர்ந்தெடுக்க இருப்பதாய் தகவல் அறியப்பட்டது. என்.சி.சி.யில் பயிற்சி பெற்றிருக்காதவர்களும் வந்திருந்தனர்.

"நேத்து லேடீஸ் செலக்ஷனாயிட்டது. ஒங்க டெலிஃபோன் ஆப்ரேட்டருங்க. இருபத்தஞ்சி பேர் செலக்ஷனாயிட்டாங்க" என்றார் அங்கிருந்த ஆர்டர்லி ஒருவர்.

டெலிஃபோன் ஹவுஸிலிருந்து ட்ரங்க் எக்ஸ்சேஞ்சு மற்றும் ஸ்பெஷல் சர்வீஸ் எக்ஸ்சேஞ்சைச் சேர்ந்த பெண் ஊழியர்கள் தேர்வுக்கு வந்திருந்து ஒரு 25 பேர் தேர்வாகியிருந்தனர். பெண்களும் வருகிறார்கள் என்பது கூடுதல் உவகையையும் உற்சாகத்தையும் ஏற்படுத்திற்று.

உடல் பரிசோதனைக்கென்று இரண்டிரண்டு பேராய் அறையொன்றுக்குள் அழைத்துச் சென்றார்கள். ஆண்களுக்கென்ற உடற்பரிசோதனைகளில் நிச்சயம் ஒன்றிரண்டாவது பெண்களுக்கான உடற்பரிசோதனையில் இடம் பெற்றிருக்காது. அவர்கள் எல்லோருமே பச்சை நிற காக்கி சீருடைக்கார இராணுவ வீரர்கள் – அதிகாரிகள். சோதனை முடிந்து வெளியில் வருபவர்கள், வெளியில் வந்துதான் தங்கள் கால் சட்டை மேல் சட்டைகளை சரியாக அணிந்துகொண்டு, எங்களைப் பார்த்து குறுஞ்சிரிப்போடு கையைசைத்துவிட்டுப் போனார்கள். அவர்களை விடாமல் மற்றவர்கள், "என்ன செய்யறாங்க, சோதனையெல்லாம் சுலபமாயிருக்குமா?" என்று கேட்பார்கள். ஓரளவுக்கு 'கில்லாடி' கிருஷ்ணன் உடற்பரிசோதனையெல்லாம் எப்படியிருக்கும் என்று நேற்றே எங்களுக்கு சொல்லியிருந்தார்.

என் முறைவந்தது. மொத்த துணிவகையறாவையும் "கழட்டு" என்ற ஒற்றை சொல்லைக் கொண்டு இராணுவக் கட்டளையிட்டார் ஹவில்தார் ஒருவர். செய்து விட்டு சுவரைப் பார்த்து நின்றேன்.

"குனிஞ்சி இருமு."

செய்தேன்.

"இன்னும் நல்லா குனிஞ்சி நல்லா இருமு." அப்போது, எங்கோ தொட்டிருப்பார் போலிருக்கிறது, கூச்சமாகவிருந்தது.



தாமஸ் டேனியல் (1749 - 1840): குற்றாலம் நீர் வீழ்ச்சி, திின்னவேலி மாவட்டம், 1804 [-1807]

"வெரிகுட், போலாம்," என்றார். பிறகு என் உயரம், மார்பளவு, எடைகளை இன்னொருவர் சோதித்துக் குறித்துக்கொண்டார். கடைசியாக மருத்துவர் ஒருவரிடம் அனுப்பினார்கள், அவர் கண்களை திறக்க வைத்து டார்ச் அடித்துப் பார்த்துவிட்டு வாயைத் திறக்கச் சொன்னார். வாயில் சகலத்தையும் டார்ச் ஒளியில் தேடிப் பார்த்துவிட்டு, காதுக்கு வந்தார்.

"காதெல்லாம் சரியா கேட்குதா?" என்று கேட்டார்.

"கேட்குதே சார்."

"என்ன, காது மோசமாயிருக்கு?", என்றார்.

"சார்?" என்றேன். பிறகு சமாளித்தபடி, "என்ன டாக்டர்?" என்று கேட்டேன்.

"காதுக்குள்ளே ஏகமா வாக்ஸ் இருக்கு. ஈயெண்டிகிட்டே போய் க்ளீன் செய்திட்டு நாளைக்கு வந்து ரிபோர்ட் பண்ணுங்க. இல்லாட்டா செலக்ட் ஆகாது," என்று கூறிவிட்டு, சீட்டொன்றில் எழுதி முத்திரை குத்தி கையெழுத்திட்டுத் தந்தார்.

அன்று மாலை காது மூக்குத் தொண்டை நிபுணர் ஒருவரைப் பார்த்து காட்டினேன். அவர் காதில் எதையோ பீய்ச்சியடித்து உட்கார வைத்தார். வெகு நேரம் கழித்து காதைச் சுத்தம் செய்து அனுப்பினார். மறுநாள் காலை மீண்டும் தேனாம்பேட்டை 'ரெக்ரூட்மெண்ட்' மையத்துக்குச் சென்று காதைக் காட்டினேன். அவர்கள் தங்கள் பெயர் பட்டியலில் என் பெயரைத் தேடிப் பார்த்து, 'OK' போட்டுக்கொண்டார்கள். அவ்வார இறுதியில் நாங்கள் கல்கத்தாவுக்கு புறப்படவிருந்தோம். கல்கத்தா போகப்போகிறேன் என்ற செய்தியறிந்த நண்பர்கள் சிலர் நெருங்கி வந்தார்கள்.

"கல்கத்தாலே என்ன சிறப்பா கிடைக்கும்?" என்று கேட்டார் ஒருவர்.

"சீப்பா என்னவெல்லாம் வாங்கலாம்?" என்று கேட்டார் ஒருவர்.

"அங்கே, சைனா டவுன்னு ஒரு ஏரியா இருக்கு. அங்கே சைனீஸ்தான் இருப்பாங்க. நான் போயிருக்கேன். நீங்க அங்கே போயிட்டு வாங்க. தோல் சாமான்கள் செய்யிவாங்க. ரொம்ப நல்ல பினிஷிங். சீப்பாயிருக்கும். எனக்கொரு லெதர் சூட்கேஸ் வேணும். வாங்கிட்டு வாங்க. பணம் தரட்டுமா, இல்லே, நீங்க வாங்கிட்டு வந்தவாட்டி தரவா. சரி, சரி, இப்பவே தர்ரேன். இரு நூறு ரூபா வச்சிக்கோங்க. அவ்வளவெல்லாம் இருக்காது. மீதியிலே, என் பொண்ணுக்கு ஒரு செருப்பு பாருங்க. இதுதான் அவளோட பாத அளவு", என்றார் கல்கத்தாவுக்கு ஏற்கனவே போனவர் ஒருவர்.

அலுவலக நண்பர்கள் கல்கத்தா ரசகுல்லா வாங்கி வரும்படி கேட்டுக்கொண்டார்கள். "கல்கத்தாவில் இரும்பு கடாய் (வாணலி) மலிவாகவும் சிறப்பாகவும் இருக்குமாமே" என்று கேட்டு விட்டு, என் முகத்தை ஆழம் பார்த்தார், எனக்கு அறையை வாடகைக்கு விட்டிருக்கும் மாமி. தனக்கொன்றை வாங்கி வரும்படி சொல்லிவிட்டு, பணம் வந்தபின் தருவதாக

சொன்னாள். இந்த பட்டியலோடு நான் தயாரானேன், இரு நாட்களில் நாங்கள் ரயிலேறினோம்.

கல்கத்தாவில் எங்களை ஒரு மிலிடெரி லாரியிலேற்றி சௌரங்கிக்கு அழைத்துபோனார்கள். இராணுவ பஜார் என்றார்கள். ஒன்றும் புரியவில்லை. மறுநாளே ‘ரூட் மார்ச்’ இருந்தது. வெகு தூரம் நடந்தோம். முதல் நாளே சப்ளை மற்றும் இஷ்யூஸ் என்று சீருடைகள், போர்வை, தட்டு, மக் எல்லம் வாங்கிக்கொண்டோம். காலையிலிருந்து மாலை வரை ‘டிரில்’, இடையில் உணவு முதலியன. மாலையில் ‘ரோல் கால்’ இருக்கும். வார இறுதியில் லாரியில் துப்பாக்கிகளோடு வெகுநேரம் பயணமானோம். என்.சி.சி.யில் ஏற்கனவே கையாண்ட துப்பாக்கி வகைகளை இங்கும் கொடுத்தார்கள். அங்கு 0.303 வகை ரைஃபிள் உபயோகித்தோம். இங்கு 0.22 வக்கை ரைஃபிளைக் கொடுத்து சுடும் பயிற்சி நடந்தது. அது அடர்ந்த காடும் மலையுமான பிரதேசம். மலையடி வாரத்தில் மண் மேடு மீது சுடுவதற்கான இலக்குகள் நிறுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு முறை சுடும் போதும், 0.22 துப்பாக்கி நம் தோளை உதைத்தது. இரவு தோளில் வலியிருந்தது.

ஞாயிற்றுக்கிழமை விடுமுறை. வெளியே போய்விட்டு வரலாம். வெளியே போகையில் ஒரு, ‘அந்தா காகசம் – அபு கா ஹூகும் – திறந்திடு சீசேம்’ குகை வாசல் மந்திரம் தருவார்கள் – Password! இந்த பாஸ்வோர்டு ஒரே மாதிரி இருக்காது. ஆளாளுக்கும் மாறுபடும். ஒண்டியாகவும் போக அனுமதிக்கமாட்டார்கள். நான்கைந்து பேராகச் சேர்ந்த ஒரு குழுவாகத் தான் போகவேண்டும். பாஸ்வோர்டும் குழுவுக்கு குழு வேறுபடும்.

முதன் முதலாக வெளியே போகையில் நாங்கள் நான்கு பேர் கொண்ட குழுவாக பாஸ்வோர்டு வாங்கிக்கொண்டோம். என்றால், வாயால் சொல்லியனுப்புவார்கள். அவ்வளவே; எழுதியெல்லாம் தரமாட்டார்கள். கூடவே எச்சரிக்கை ஒன்றையும் விடுவார்கள்.

“பாஸ்வோர்டை மறந்துவிடலாகாது.”

நாங்கள் காலையில் கிளம்பி டிராமில் ஏறினோம். செம்ம நெரிசல். கண்டக்டர் உள்ளே வந்து டிக்கட் தர முடியவில்லை. டிக்கட் வாங்காமலே பயணித்து ஹவுரா பாலம் கடைசி நிறுத்தத்தில் இறங்கி பிரம்மாண்டமான ஹவுரா பாலத்தை நடந்தே கடந்து விட்டு, நடந்தே திரும்பி வந்து, வேறெதையெதையோ கண்டுவிட்டு, மாலை ஆறு மணிக்கு தலை வாசலையடைந்தோம். நிறுத்தப்பட்டோம்.

“யார் நீங்கள்?”

“டெர் ரிடோரியல் ஆர்மி.”

“பாஸ்வோர்டு என்ன?”

ஐய்யோ மறந்து போச்சே; காலையில என்னமோ சொன்னானே, அந்த இந்திக்கார சிப்பாய்!

“உனக்கு ஞாபகமிருக்கா?”

“இல்லே, நீதான் முன்னால நின்னு எல்லாம் பேசின, கேட்டுகிட்டே.”

மீண்டும் சென்ட்ரி கேட்டார், “க்யா பாஸ்வோர்டு?”

அலிபாபா 4 திருடர்களில், அலிபாபாவின் பேராசைப் பிடித்த அண்ணன் காசிம்கான், குகைக் கதவைத் திறக்க – மூட ஓதப்படும் ரகசிய சொற்களை அறிந்து, ரகசியமாய் திறந்து உள்ளே போய், வேண்டியதை நிரப்பிக் கொண்டு வெளியேற, கதவைத் திறக்கச் சொல்லும் வார்த்தைகளை மறந்துவிடுவான். அதுபோல எங்களுக்கு காலையிலிருந்து சென்ட்ரி சொல்லியனுப்பிய பாஸ்வோர்டு மறந்துபோயிருந்தது.

“புலி”, என்று சொல்லிப் பார்த்தேன். சென்ட்ரி இல்லையென்று தலையை ஆட்டினார்.

“பூனை”, என்றார் எனது நண்பர் ஒருவர் அதுவும் தவறு.

“சிங்கமா?” என்று எங்களுக்குள்ளேயே கேட்டுக்கொண்டோம்.

“சும்மா, மிருகங்க பெயரா நினைக்கறமே, மாத்தி யோசி..”, என்றார் ஒருவர்.

நேரம் போய்க் கொண்டிருந்தது.

“ரோல் காலுக்கு நேரமாச்சே”, என்றேன் சென்ட்ரியிடம். அவர் சிரித்துக்கொண்டே தன்னிடமுள்ள ரிஜிஸ்டரைப் பிரித்து அன்றைய தேதியில் அறிவிக்கப்பட்ட பாஸ்வோர்டுகளின் பட்டியலைக் காட்டி கண்டறியச் சொன்னார். ஒரு வழியாக நினைவுக்கு வந்தது.

“மதறாசி.”

நாங்கள் உள்ளே செல்ல அனுமதிக்கப்பட்டோம். இந்த பயிற்சி காலத்தின் போது நான் சென்று பார்த்த அரிய இடம், விக்டோரியா மெமோரியல் மியூசியம். இங்குதான் டானியல்களின் ஓவிய ‘பிரிண்ட்’கள் அடங்கிய அற்புதமான டானியல் காலரியைச் சுற்றிப் பார்த்தேன். தமிழகக் கோட்டைகள் சிலதையும், கோயில்கள், மாளிகைகள், மகாபலிபுரக் காட்சிகள் என்று தாமஸ் டானியல் 1780களில் செய்திருக்கும் வியத்தகு வண்ண பதிப்போவியங்களையும் இங்கு பார்த்தேன். அவற்றின் பாதிப்பாலும் டானியல்கள் ஓவியம் செய்ய மேற்கொண்ட கடினமான பயணங்களை அறிந்த ஆர்வத்தாலும் தான் எனது ஆய்வு ரீதியான ‘தமிழகக் கோட்டைகள்’, நூலை எழுதி முடிக்க முடிந்தது.

சைனா டவுனுக்குச் சென்று நண்பர் கேட்ட தோல் பெட்டி, செருப்பு விஷங்களை வாங்கிக்கொண்டேன். ரசகுல்லா சட்டிகளில் தருவதால் அவை உடையக் கூடுமென வாங்கி வரவில்லை. எங்கள் பயிற்சி காலம் நான்கு வாரங்கள்தான். விருப்பமிருந்தால் மறு ஆண்டும் போய்வரலாம். ஆனால், நான் போகவில்லை. மறு வருடம் முதல் ‘டெர்ரிடோரியல் ஆர்மி’ பயிற்சி தற்காலிகமாய் நிறுத்தி வைக்கப்பட்டது. பி.எஸ்.என்.எல் ஆன பிறகு இத்திட்டம் முற்றிலுமாய் நீக்கப்பட்டது. ●

(தொடரும்)

# நாயக பிம்பத்தை நீண்ட நேரத்திற்கு சுமந்துகொண்டிருக்க முடியாது!

அஸ்கர் ஃபர்ஹாதி    தமிழில்: ராம் முரளி

**சமூக ஊடகத்திற்கு நேர்மறையான பக்கமும் இருக்கிறது. அது, இதற்கு முன் நாம் அறிந்திராத பல குரல்களை நாம் கேட்கும்படி செய்கிறது. எனினும், ஏராளமான குரல்கள் அவ்விடத்தில் குவிந்திருப்பதால் மிக எளிதாகவே தப்பர்த்தங்களுக்கும் தவறான புரிதல்களுக்கும் அது வழிவகுத்துவிடுகிறது. மிகவும் சிக்கல்வாய்ந்த ஒரு பிரச்சனையைச் சமூக ஊடகம் அதற்குரிய முக்கியத்துவமற்று, குறைவான சொற்களின் வழியாக அணுகுகின்றது. உண்மையை அறிந்துகொள்ளும் செயலாக்கத்தில், அதுவொரு குழப்ப நிலையையே தோற்றுவிக்கிறது.**

ஈரானிய இயக்குநரான அஸ்கர் ஃபர்ஹாதியின் புதிய படமான "A Hero"வைப் பார்த்து நிறைவுசெய்யும்போது கனத்த மௌனமே நம்மை ஆட்கொள்வதாக இருக்கிறது. கிட்டதட்ட கைவிடப்பட்ட நிலையை பார்வையாளர்கள் உணரும்படியாக இப்படம் உருவாகியிருக்கிறது. உண்மையென்றும் பொய்யென்றும் வரையறுக்கப்படும் சொல்லாடல்களின் பல பரிமாணங்களை இதில் நாம் பார்க்க நேரிடுகிறது. அந்த உண்மையினுள்ளும் பொய்களினுள்ளும் பார்வையாளர்களும் இருக்கவே செய்கிறார்கள். அதனாலேயே, ஒரு நிகழ்வின் பல கோணங்கள் காண்பிக்கப்பட்டும் தெளிவுற தீர்மானங்களுக்குள் நகர முடியாமல் படத்தின் இறுதியில் மௌனித்துவிடுகிறார்கள்.

முழு முற்றான உண்மையென்று ஒன்றிருக்க முடியுமா என்றே இத்திரைப்படம் கேள்வியெழுப்புகிறது. ஒரு எளிய மனிதனின் அன்றாட வாழ்க்கையிலிருந்து சிறு பகுதியை 'A Hero'வில் நாம் பார்க்கிறோம். அவன் மீது ஏற்றப்பட்டிருக்கும் கடன் சுமை, அந்தக் கடனைத் தீர்க்க அவன் தேடும் வழிமுறைகள், அத்தகைய பிரயத்தனங்களில் உடன் பயணிக்கும் மனிதர்கள், நேர்மையை ஒரு தேர்வாகக் கைக்கொள்ளும்போது அவன் மீது கட்டமைக்கப்படும் நாயகப் பிம்பம், மிக விரைவிலேயே அந்தப் பிம்பம் தலைக்கீழாக்கப்படுதல், தான் உண்மையாகவே ஒரு நேர்மையான மனிதன்தானா எனும் குழப்பங்களுக்குள் அவன் வீழ்வது என ஒரு சூழலின் தொடர் நிகழ்வுகள் யதார்த்தமாகவும் நிஜ உலக தர்க்கங்களுக்கு உட்பட்டும் இத்திரைப்படத்தில் காட்டப்படுகிறது.

எந்தெந்த செய்கைகளையெல்லாம், அறத்தையோ சாதமான விளைவுகளையோ ஒரு மதிப்பீடாக வைத்து ஒருவரைத் தராசில் மேலேற்றுகிறோமோ, அதே விழுமியங்களை வைத்தே மற்றொரு கோணத்திலிருந்து அதே செய்கைகளுக்காக அவரைக் கீழிறக்கவும் முடியும் என்பதை இத்திரைப்படத்தில் நாம் உணருகிறோம். சமூக ஊடகங்களும் இந்தச் சாதக / பாதக விளைவுகளில் பெரும் பங்களிப்பு செய்துவருகின்றன.

நவீன ஈரானிய திரைப்படைப்பாளிகளுள் உலகம் முழுக்க பெரும் கவனம் பெற்றிருப்பவர் அஸ்கர் ஃபர்ஹாதி. இவருடைய அனைத்து திரைப்படங்களிலுமே மேற்கண்ட கூறுகள் பேசுபொருளாக இருந்துள்ளன. நவீன ஈரானியச் சூழலமைப்பிற்குள் ஆண் - பெண் உறவு சிக்கல் என்னவாக இருக்கிறது, வெவ்வேறு சமூக அடுக்குகளில் இருக்கக்கூடிய மனிதர்களுக்கிடையிலான உறவுநிலை, அதனுடைய இணக்கத்தன்மை, முரண்பாடுகள் ஆகியவையும் அவருடைய படங்களில் மையமாக இருந்துள்ளன. அவரது முந்தைய திரைப்படங்களான ''A Separation'', 'The Salesmam' ஆகிய திரைப்படங்களுக்காக இருமுறை ஆஸ்கர் விருதைப் பெற்றவர். 2021இல் வெளிவந்திருக்கும் 'A Hero' திரைப்படமும் ஆஸ்கர் போட்டியிலிருந்ததோடு, 'கான்ஸ்' திரைப்பட விழாவில் 'கிராண்ட் பிரிக்ஸ்' விருதைப் பெற்றிருக்கிறது. அஸ்கர் ஃபர்ஹாதியிடம் 'A Hero' திரைப்படத்தை முன்வைத்துத் திரை விமர்சகர்கள் மார்ஷல் ஷஃபர், கெவின் லீ மேற்கொண்ட இருவேறு நேர்காணல்களிலிருந்து தேர்வுசெய்யப்பட்ட கேள்விகளின் மொழியாக்கமே இது.



**'A Hero' திரைப்படத்தில் வருகின்ற கதாபாத்திரங்களை எவ்வாறு எழுதினீர்கள்? ஏனெனில், ஒவ்வொரு கதாபாத்திரமும் திரையில் பல அடுக்குகளைக் கொண்டவர்களாக உருவாக்கப்பட்டிருக்கிறார்கள்.**

ஒரு நெருக்கடியான சூழலை மனதில் இருத்திக்கொண்டுதான் இந்தக் கதையை எழுதத் தொடங்கினேன். அந்த நெருக்கடிக்குள் கதாபாத்திரங்களைப்



புகுத்தினேன். அதன்பிறகு, அத்தகைய நெருக்கடியான சூழலை எதிர்கொள்வதன் மூலம் தாங்கள் உண்மையிலேயே யார், எத்தகையவர்கள் என்பதைக் கதாபாத்திரங்கள் காண்பித்துவிடுவார்கள். இதை செய்யாமல், என்னால் எந்தவொரு கதாபாத்திரத்தையும் பார்வையாளர்களின் முன்னால் நடமாடச் செய்ய முடியாது. நிஜ உலக மனிதர்களும் நெருக்கடியை எதிர்கொள்ளும்போது தங்களுடைய மற்றுமொரு கோணத்தை, முகத்தை வெளிப்படுத்தவே செய்கிறார்கள். தங்களுக்குள்ளாகவே முரண்களையுடைய கதாபாத்திரங்கள் உள்ள திரைப்படங்களையே நான் விரும்புகிறேன். அவர்களிடமிருந்து நாம் என்ன எதிர்பார்க்கிறோமோ அதற்கு மாறாகவே அவர்களுடைய செயல்கள் இருக்கும். அவர்களுடைய தவறுகளைப் பார்க்கக்கூடிய அதே நேரத்தில் அவர்களின் மீது நமக்கு பரிவுணர்ச்சியும் உண்டாகிவிடும்.

**எழுத்தாக்கப் பணியின் தொடக்கத்திலோ எழுதும்போதே வெளிப்படையாகப் புலனாகாத, அதேசமயம் உள்ளார்ந்த அமைந்திருக்கும் நோக்கங்கள் எதையும் மனதில் இருத்திக்கொள்வீர்களா?**

ஒரு கதாபாத்திரம் தன்னைப் பற்றி வெளிப்படுத்திக்கொள்வதற்குப் போதுமான நேரத்தை (காட்சிகள் நகர நகர) அவர்களுக்கு நான் வழங்குவேன். அதேபோல, அவர்களை நேசிப்பதற்கான உணர்வு ரீதியிலான வெளியைப் பார்வையாளர்களுக்கும் வழங்கியிருப்பேன். இந்தக் கால அவகாசமும் வெளியும் தாங்கள் என்ன செய்கிறோம் என்பதையும் எதற்காகச் செய்கிறோம் என்பதையும் கதாபாத்திரங்கள் பார்வையாளர்களுக்குத் தெளிவுபடுத்துவதற்காகத்தான். பிரதான கதாபாத்திரத்திற்கு மட்டுமல்லாமல், எதிர்மறையான கதாபாத்திரங்களுக்கும் இது பொருந்தும். எந்தளவுக்கு மையக் கதாபாத்திரத்தின் மீது நமக்கு இரக்கமும் பரிவுணர்ச்சியும் ஏற்படுகிறதோ, அதே அளவுக்கு அந்தக் கதாபாத்திரத்திற்குச் சிக்கல் ஏற்படுத்தக்கூடியவர்களின் மீதும் நமக்கு அனுதாபம் ஏற்படக்கூடிய அளவுக்குத் திரைக்கதை அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

**உங்கள் திரைப்படத்தில், சில குறைபாடுகளுடைய, அதே நேரத்தில் நல்ல செயலைச் செய்யக்கூடிய, ரஹீம் ஒரு நல்ல மனிதர் என்பதை ஏற்றுக்கொள்வது பார்வையாளர்களுக்கு மிகக் கடினமாக இருக்கிறது. தற்காலத்தில் இத்தகையதொரு சிக்கலைத்தான் நாம் எல்லோரும் எதிர்கொள்கிறோம் என்று நினைக்கிறேன். எது உங்களை இந்தக் கருத்தாக்கத்தை ஆராய்ந்து பார்க்கத் தூண்டியது?**

இந்தக் கதையை எழுதுவதற்கு ஏராளமான விஷயங்கள் தூண்டுதலாக இருந்தன. எனினும், என் முன்னாலிருந்த முதன்மையான சவால் என்னவென்றால், துப்பாக்கி இல்லாமல், கொலை இல்லாமல் அல்லது இதுபோன்ற எதுவுமில்லாமல் ஒரு திரைப்படத்தை மிகச் சுவாரஸ்யமாக உருவாக்குவது எப்படி என்கிற கேள்விதான். மேலும் இது மிக மிக எளிமையான, எல்லோரும் தெரிந்து வைத்திருக்கின்ற ஒரு கதை. அதை எப்படி ஒரு சுவாரஸ்யமான திரைப்படமாகத் தொகுப்பது? கதையை வளர்த்தெடுப்பதில் என்முன்னாலிருந்த சிக்கலே இதுதான். 'AHero' முழுக்க முழுக்க ரொம்பவும் தினசரித்தன்மையிலான ஒரு கதை; தினமும் நாம் பார்க்கக்கூடிய, கேட்டு அறிந்துகொள்ளக்கூடிய, வாசத்தறியக்கூடிய நிகழ்வுகளின் தொகுப்பாக்கமே இது. இத்திரைக்கதையின் எழுத்தாக்கப் பணியின் மீது சுவாரஸ்யத்தைக் கூட்டுவதாகவும் இதுவே இருந்தது.




எனது ஆர்வத்தைக் கிளர்த்திய மற்றொரு விஷயம்: இந்தத் திரைப்படத்தைப் பார்த்து முடிக்கின்றபோது பார்வையாளர்களின்தீர்மானம்என்னவாகஇருக்கும்? ரஹிம் கதாப்பாத்திரத்தை அவர்கள் எவ்வாறு பார்க்க போகிறார்கள்? குற்றவுணர்ச்சியுடைய மனிதனாக ரஹிமை அவர்கள் பார்க்கப் போகிறார்களா? அல்லது அப்பாவி எனக் கருதப் போகிறார்களா? படத்தில்கூட ஒரு வரி வருகிறது. யாரோ ஒருவர் ரஹிமிடம், "நீ ஒன்று புத்திசாலியாக இருக்க வேண்டும் அல்லது எளியதொரு மனிதனாக இருக்க வேண்டும்" என்பார். பார்வையாளர்களும் தமக்குள் இருதரப்பாகப் பிரிந்து, ரஹிம் புத்திசாலி என்று ஒருதரப்பும், அவர் ரொம்பவும் எளிமையானவர் என்று இன்னொரு தரப்புமாக நிற்பார்கள்.

**'எளிமை' எனும் வார்த்தையைப் பயன்படுத்தியதற்காக உங்களை பாராட்டுகிறேன். நீங்கள் இந்தக் கதையைப் பிறிடத்தில் எளிய கதை என்று அறிமுகப்படுத்தும்போதும் பரிந்துரைக்கும்போதும் அது எளிய கதைபோன்றே தோற்றமளிக்கிறது. ஆனால், சிறிது ஆழமாகப் பார்த்தால், அதற்குள் ஏராளமான அடுக்குகளும் விவரிப்புகளும் இருக்கின்றன. வளமான கருத்தியல் இருக்கிறது. சிக்கலான பல கருப்பொருட்கள் இருக்கின்றன. உங்கள் படைப்பாக்கச் செயல்பாடு குறித்து சிறிதளவில் பகிர்ந்துகொள்ள முடியுமா? எளிமையையும் சிட்டுக்குத்தன்மையையும் எவ்வாறு பிணைக்கிறீர்கள்?**

முன்பே சொன்னதுபோல அடிப்படையில், இது எளிய மனிதனொருவனைப் பற்றிய கதை. மிகச் சிறிய தவறு ஒன்றைச் செய்வதன் மூலமாகச் சிக்கலான ஒரு சூழலுக்குள் அவன் வீழ்ந்துவிட நேரிடுகிறது. இந்தத் தருணத்தை வெவ்வேறு கோணங்களிலிருந்து பார்க்கக்கூடிய ஒவ்வொரு நபரின் மூலமாகவும் அந்தத் தருணம் கூடுதல் சிடுக்குத்தன்மையை அடைகிறது. பார்வையாளர்களும் தங்கள் முன்னால் இருக்கின்ற இந்த எளிய தருணம் பல கோணங்களிலிருந்து விவரிக்கப்படுவதை எதிர்கொள்கிறார்கள். இப்போது யோசித்துப் பார்த்தால், வேறுபட்ட கதைசொல்லல் முறையின் மூலமாக எளிய தருணம் சிக்கலான ஒன்றாக மாறியிருக்கிறது. அதோடு, பெரிய திருப்பங்களோ அசாத்தியமானவையோ நிகழாததாலும் இவ்வாறு ஆகியுள்ளது. இத்தருணம் முழுக்க முழுக்க யதார்த்தத்தில் நிகழக்கூடியதே. நான் வலிந்து இதனை சிக்கலான ஒன்றாக மாற்றவில்லை. கதையின் ஆன்மாவே அவ்வாறு அதை வடிவமைத்துக்கொண்டுள்ளது.

**அற்புதம்! இந்த எழுத்தாக்கப் பணியில் எது மிகவும் கடினமான பகுதியாக இருந்தது?**

மிகப் பெரிய சவாலே, கதாபாத்திரத்தை நல்லவர் என்றோ தீயவர் என்றோ நான் பிரிக்க விரும்பாததுதான். பார்வையாளர்கள் சுயமாக ஒவ்வொரு கதாபாத்திரத்தையும் புரிந்துகொள்வதற்கு முன்னதாக, எந்தவொரு முன் முடிவுகளையும் அவர்கள் மீது திணித்துவிடக்கூடாது என்பதில் கவனமாக இருந்தேன். எனது சொந்த நிலைப்பாட்டையும் தீர்மானங்களையும் எழுத்தாக்கப் பணியிலிருந்து விலக்கிவிட்டேன். இது ரொம்பவும் கடினமான ஒன்றுதான். ஒரு கதாபாத்திரத்தை முன் தீர்மானித்துவிட்ட எழுத்தாளர், திரைப்படத்திற்குப் பின்னாலிருந்து விவரிப்பு செய்துகொண்டிருப்பதைப்போன்ற உணர்வைப் பார்வையாளர்களுக்கு ஏற்படுத்திவிடலாம். இதைத் தவிர்க்க வேண்டுமென்பதில் கவனத்துடன் இருந்தேன்.

**பொதுவாக நாம் ஒரு திரைப்படத்தை மையக் கதாபாத்திரத்தின் கண்களின் வழியாகவே**

பின்தொடர்ந்து செல்வோம். ஆனால், உங்கள் திரைப்படங்களில் பிற கதாபாத்திரங்கள் செய்யக்கூடிய செயல்களுக்கான நியாயங்களையும் நாம் எதிர்கொள்ள நேரிடுகிறது. இத்தகைய பாணியை முயன்று பார்க்க வேண்டும் எனும் ஆர்வத்திலிருந்துதான் இந்தத் திரைப்படம் உருவாகியதா? திரைப்படத்தின் பெயர் 'கதாநாயகன்' என்று இருக்கிறது. ஆனால், முரண்பாடாக, திரையில் தோன்றக்கூடிய கதாபாத்திரங்களை அவரவர்களுடைய தரப்பிலிருந்து பார்க்கும்போது ஒவ்வொருவருமே 'கதாநாயகர்களாக' இருக்கிறார்கள் என்பதையே நீங்கள் காட்டியிருக்கிறீர்கள்?

'ஹீரோ' எனும் வார்த்தையைக் கேட்கும்போது, தான் சார்ந்த முடிவுகளைச் சுயமாக எடுக்கின்ற கதாபாத்திரமே நமக்கு நினைவுக்கு வரும். அவர்கள் யதார்த்தவாதிகளாகவும் வலிமையானவர்களாகவும் இருப்பார்கள். பார்வையாளர்கள் தங்களை அவர்களுடைய இடத்தில் வைத்துப் பொருத்திப் பார்க்கும் நிலையில் அவர்கள் இருப்பார்கள். ஆனால், நிஜ வாழ்க்கையில் ஒருபோதும் அவ்வாறு இருப்பதில்லை. குறிப்பாக, இக்காலத்தில் நாயகப் பிம்பத்தை நீண்ட நேரத்திற்குச் சுமந்துகொண்டிருக்க முடியாது. சில கணங்களில் கலைந்து கரைகின்ற ஒரு அரிதாரத்தைப்போலத்தான் நாயகப் பிம்பம் இக்கால யதார்த்த உலகில் இருக்கிறது. இங்கு, திரைப்படத்தில் நாமொரு கதாப்பாத்திரத்தைப் பார்க்கிறோம். ஆனால், யாருமே அவருடைய நிலையில் இருக்க விரும்புவதில்லை. ஏனெனில், அவன் தான் சார்ந்த முடிவுகளைச் சுயமாக எடுப்பதில்லை. அவனொரு வளைந்துகொடுக்கக்கூடிய மனிதன். அவன் சார்பாக பிறர்தான் முடிவுகளை எடுக்கிறார்கள். இறுதியில் மட்டுமே ஒரு விதிவிலக்கு ஏற்படுகிறது. தனது மகன் முன்னால் ஒரு தீர்மானத்தை எடுத்து அவன் நாயகனாகிவிடுகிறான். அவனொரு உறுதியற்ற மனிதன் என்றாலும் அவன் மீது நமக்கு பரிவுணர்ச்சி ஏற்படுகிறது. அவனொரு சாதாரண மனிதன் என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. பிறர்தான் அவனை ஒரு முக்கிய நபராகவோ கதாநாயகனாகவோ மாற்றுகிறார்கள். உதாரணத்திற்கு, உள்ளூர் மக்களின் மத்தியில் அவன் பிரபலமாக அறியப்படும்போது அவனுடைய தங்கை, புகை பிடிக்கும் பழக்கத்தை அவன் கைவிட வேண்டுமென தெரிவிக்கிறாள். அவனுடைய 'நல்ல மனிதன்' பிம்பத்திற்கு இது பொருத்தமற்றது என்பது அவளுடைய கருத்தாக இருக்கிறது. உறவினர் ஒருவர் நல்ல உடைகளை அவன் உடுத்தியாகவேண்டுமெனக் கருத்துரைக்கிறார். செய்தித்தாள்களின் வாயிலாக உருவாகியிருக்கிற அவனுடைய பிம்பத்திற்கு ஏற்றாற்போல, யதார்த்தத்திலும் அவனை மாற்ற வேண்டுமென அவர்கள் பிரயத்தனப்படுகிறார்கள்.

இந்தத் திரைப்படத்தில் சமூக ஊடகத்தின் பங்களிப்பை எவ்வாறு தீர்மானித்தீர்கள்?

எழுதத் தொடங்கியபோது இது சமூக ஊடகம் தொடர்புடையதாக இருக்குமென நான் நினைக்கவில்லை. ஆனால், இந்தக் கதையில் உள்ள மனிதர் எவ்வளவு விரைவாக நாயகனாகிறான், அதிலிருந்து எவ்வளவு வேகமாகக் கீழிறக்கப்பட்டு எதிர்மறை பாத்திரமாகக் கருதப்படுகிறான் என்று நினைக்கும்போது இதை சாத்தியப்படுத்தக்கூடிய கருவி பற்றி யோசிக்கத் தொடங்கினேன். செய்தித்தாள், தொலைக்காட்சியைக் கடந்து சமூக ஊடகமும் ஒரு மனிதரின் புனிதப் பிம்பத்தை கட்டமைக்கவும் கலைத்து நொறுக்கவும் பெரும் பலமான ஒரு கருவியாக செயல்படுவதை அறிந்துகொண்டேன். அந்தத் தருணத்தில்தான் சமூக ஊடகம் கதையில் சேர்க்கப்பட்டது. இது சமூக ஊடகம் குறித்ததொரு முழுமையான விமரிசனம் அல்ல; ஏனெனில், சமூக ஊடகத்திற்கு மற்றொரு நேர்மறையான பக்கமும் இருக்கிறது. உதாரணத்திற்கு, இதற்கு முன் நாம் அறிந்திராத பல குரல்களை நாம் கேட்கும்படி செய்கிறது. எனினும், ஏராளமான குரல்கள் அவ்விடத்தில் குவிந்திருப்பதால் மிக எளிதாகவே தப்பர்த்தங்களுக்கும் தவறான புரிதல்களுக்கும் அது வழிவகுத்துவிடுகிறது. மிகவும் சிக்கல் வாய்ந்த ஒரு பிரச்சனையைச் சமூக ஊடகம் அதற்குரிய முக்கியத்துவமற்று, குறைவான சொற்களின் வழியாக அணுகுகின்றது. உண்மையை அறிந்துகொள்ளும் செயலாக்கத்தில், அதுவொரு குழப்ப நிலையையே தோற்றுவிக்கிறது.

சமூக ஊடகம் செயல்படும் விதத்தைத் திரைப்படத்தில் சேர்க்க வேண்டாமென ஏன் பிடிவாதமாக இருந்தீர்கள்?

எனக்கு அதைத் திரையில் காட்டுவதில் விருப்பமில்லை. விளைவுகளை மட்டுமே நான் பார்க்க விரும்பினேன். இந்நாட்களில் சமூக ஊடகம் குறித்த ஏராளமான பிம்பங்களைத் திரைப்படங்களில் நாம் பார்க்கிறோம். ஆனால், நான் இத்திரைப்படத்தில் ஆராய விரும்பியது, அதனுடைய விளைவுகளை மட்டுமே.

உங்கள் திரைப்படங்கள் யதார்த்தமாக இருக்க வேண்டுமென்பதற்காக ஆவணப்படம், திரைப்படங்களின் கூறு முறையை ஒன்று கலப்பதாகத் தெரிவித்திருக்கிறீர்கள். 'A Hero' திரைப்படத்தின் இறுதிக் காட்சியைப்போல, ஒரு திரையை இரண்டாகப் பிரித்து இருவேறு செயல்களைக் காட்டும் முடிவுக்கு எப்படி வந்துசேர்ந்தீர்கள்? அக்காட்சி ஓவியத்தின் அழகியலைக் கொண்டிருந்தது.

பார்வையாளர்கள் இதுவும் வாழ்க்கையும் ஓர் அங்கம்தான் என நம்புவார்கள் என்றால், அதை நான் திரைப்படத்தில் சேர்ப்பேன். ஒருவேளை, 'இதை இயக்குநர் சேர்த்திருக்கிறார்' என உணருவார்களேயானால் நான் அதை திரைப்படத்தில் இருந்து நீக்கிவிடுவேன். இறுதிக் காட்சியைப் பொறுத்தவரையில் பார்வையாளர்கள், தினசரித் தன்மையிலான வாழ்க்கையில் நடைபெறக்கூடிய ஒன்றுதான் அது என நம்புவார்கள் என்பதே என்னுடைய நம்பிக்கையாக இருந்தது. அது ரொம்பவும் திட்டமிடப்பட்ட ஃபிரேம். ஒரே நேரத்தில் ஒரே திரையில் அருகருகில் வெவ்வேறு செயல்கள் நடைபெறுகின்றன. ஆனால், ஒளி, நடிப்பின் வாயிலாக, அதையொரு யதார்த்தச் சூழலென்றே கருதும்படியாக


a hero

உருவாக்க முயன்றிருக்கிறேன்.

ஒவ்வொரு கதாபாத்திரத்திற்கும் முன்கதையைத் தயாரித்து வைத்துக்கொள்வது பற்றி முன்பொரு நேர்காணலில் சொல்லியிருந்தீர்கள். அதுவொரு மிக நீண்ட பணியாக இருப்பதையும் திரைப் படத்தில் அவையெல்லாம் சொல்லப்படாது என்றாலும் கதாபாத்திரங்களின் உணர்வு வெளிப்பாடுகளை வடிவமைப்பதில் அவை பயன்படும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகின்றது.

ஒரு செயலில் எவ்வளவு நேரத்தைச் செலவிடுகிறீர்களோ அந்தளவு அந்தச் செயல் செழிப்புறுகிறது எனும் பாடத்தைப் பல்கலைகழக்கத்தில் பயின்றபோது எனது ஆசிரியரிடமிருந்து கற்றுக்கொண்டேன். அது கிட்டதட்ட வைன் தயாரிப்பதைப் போன்றது. தரமான வைன் தயாரிப்பதற்கு நீண்ட காலத்தைச் செலவிட வேண்டும். அதனால், குறுகிய காலத்தில் திரைக்கதை எழுதுவது குறித்து என்னால் கற்பனை கூட செய்துபார்க்க முடியவில்லை.

கதையை உருவாக்கும் காலகட்டத்தில், எந்தளவுக்கு கதையிடமிருந்து விலகியிருக்க முயல்வீர்கள். ஏனெனில், கதை உங்கள் மனதிற்குள்ளாகத் தேங்கியிருக்கும். அதுவடிவம் பெறுமா பெறதா என்பதும் உறுதியாகியிருக்காது.

பொதுவாக, ஒரு கதையை அமர்ந்து எழுதத் தொடங்குவதற்கு முன்பாக இரண்டு அல்லது மூன்று வருடங்கள் அதை மனதில் சுமந்துகொண்டிருப்பேன். சில நேரங்களில் நான் அதை விரும்புவேன். சில நேரங்களில் அதன் மீது எனக்கு வெறுப்பு உண்டாகும். இத்தகைய காலகட்டத்தைப் பொறுத்தவரையில், ஒருநாள் ஒருவரை நேசிக்கிறீர்கள், மறுநாளே அவரை வெறுக்கிறீர்கள் என்பதைப்போன்ற உணர்வுநிலையில்தான் நான் இருப்பேன். நேசித்தலுக்கும் வெறுத்தலுக்கும் இடையிலான ஒரு சூழல்தான் அப்போது இருக்கும்.

(கேள்வியாளர் சிரிக்கிறார்)

அதன்பிறகு, அந்தப் பெண்ணுடன் டேட்டிங் செல்கிறீர்கள். அவளிடம், “இப்போது நாம் வெளியில் சென்று ஒரு காஃபி அருந்தலாம்” என்று சொல்கிறீர்கள். இதன் தொடர்ச்சியாக, அவளிடம் உங்கள் காதலை வெளிப்படுத்துகிறீர்கள். அதனால், இந்தக் காதல் ஒரே இரவில் மலர்ந்த ஒன்றல்ல. மிக நிதானமாக மனதில் அசைபோட்டு, மெதுமெதுவாக இந்தக் காதல் உங்களுக்கு வசப்பட்டிருக்கிறது. ஒரே இரவில் மலரும் காதல் வெகு விரைவிலேயே காணாமலாகிவிடும்.

(அஸ்கர் ஃபர்ஹாதி சிரிக்கிறார்)

உங்கள் பதில் அருமையாக இருந்தது. ‘A Separation’ திரைப்படத்தை முதல்முறையாகப் பார்த்த நாளினை நினைத்துக்கொள்கிறேன். அந்த திரைப்படம் என் வாழ்க்கையையே மாற்றிவிட்டது. கதை சொல்லல், திரைப்பட உருவாக்கம் சார்ந்து எனக்கிருந்த பார்வையையே



a separation

அப்படம் மாற்றியமைத்துவிட்டது. நான் மிக நேசித்த படமாகவும் அது இருக்கிறது. அதனால் எந்தெந்த இயக்குநர்கள் உங்களுக்குப் பெரும் உந்துதலாக இருந்தார்கள் என்பதை அறிந்துகொள்ள ஆவலாக இருக்கிறேன். நீங்கள் திரைப்படத்தை உருவாக்கத் தொடங்கிய காலத்திலோ அல்லது தற்சமயத்திலோ உங்களுடைய விருப்ப இயக்குநர்களை, திரைப்படங்களை, எழுத்தாளர்களைப் பகிர்ந்துகொள்ள முடியுமா?**

தொடர்ச்சியாக உங்களுக்கு உந்துதல் அளிக்கின்ற மனிதர்களும் திரைப்படங்களும் கதைகளும் இருக்கவேதான் செய்யும். கதை சொல்லுதலின் மீதான எனது ஆர்வத்தைக் கிளர்த்தியதில் எனது தாத்தாதான் மிக முக்கியமானவர். அவர் ஒரு கலைஞன் அல்ல. ஆனால், ஏனையோரைத் தன் முன்னால் மௌனமாக அமர்ந்து, தான் சொல்லும் கதைகளுக்கு மனம் வசப்படுத்தும் ஆற்றல் அவரிடம் இருந்தது. அதன்பிறகு சில ஈரானிய திரைப்பட இயக்குநர்களின் படங்களைப் பார்க்கத் தொடங்கியதும் திரைப்படங்களின் மீது எனக்கு ஆர்வமேற்பட்டது. அப்போது நான் இளைஞனாக இருந்தேன். மெல்ல மெல்ல வயது கூடக்கூட இத்தாலிய நியோ ரியலிச திரைப்படங்களைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவை என்னை பெரியளவில் கவர்ந்தன.

மூன்று திரைப் படைப்பாளிகள் என் மீது ஆழமான பாதிப்புகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். விட்டோரியா டி சிகா, பில்லி வைடர், பெலினி. அதன்பிறகு... பெர்க்மேன், குரோசாவா எனக் காலங்களில் அந்தப் பட்டியல் பெருகியபடியே இருந்தது.

**உங்களுடைய ஒவ்வொரு திரைப்படத்தையும் பார்த்து நிறைவு செய்ததற்குப் பிறகு எனக்குள் எழும் கேள்வியொன்றை உங்களிடம் கேட்க விரும்புகிறேன். உங்களிடம் இதற்கான பதில் இருக்குமென்று நம்புகிறேன்: ஏன் மனிதர்கள் பொய்யுரைக்கிறார்கள்?**

இந்தக் கேள்வியை இவ்வாறு மாற்றியமைப்பதன் மூலம் மேலும் சிறப்பானதாக ஆக்கலாம்: மனிதர்கள் உண்மையைச் சொல்லும்போது என்ன நடக்கிறது? ஏனெனில், சமூகத்தில் பொய்யைச் சொல்வதை விடவும் உண்மையைச் சொல்லும்போதுதான் அதிகமானவற்றை நாம் இழக்க நேரிடுகிறது. அது நாம் வாழும் சூழலமைப்பை அடிப்படையாகக் கொண்டது. இன்னுமொரு முக்கியமான அம்சம் என்னவென்றால், மனிதர்கள் தாம் பொய் சொல்கிறோம் என்பதையே சிலநேரங்களில் அறிந்திருப்பதில்லை. உண்மையின் சில பகுதிகளைத் தவிர்த்துவிட்டிருப்பதாக நினைக்கும் அவர்கள், அதைப் பொய் என்று அழைப்பதில்லை. சில நேரங்களில்,உண்மையை எந்தளவிற்கு நம்புவார்களோ அதே அளவில் பொய்யையும் நம்புகிறார்கள். மேலும் பல சமயங்களில், பொய்யுரைக்கும்போதும் தாங்கள்

உண்மையைத்தான் பேசுகிறோம் என்றே மக்கள் நினைக்கிறார்கள். 'ரஷோமான்' திரைப்படத்தில் குரோசாவா இதுகுறித்து தான் அலசியிருக்கிறார். அவர் உங்கள் கேள்விக்குப் பதில் அளித்திருக்கிறார். அவர் எந்தவொரு சூழலுக்கும் பல்வேறு கோணங்கள் இருக்கும் என்று தெரிவித்திருக்கிறார். அவற்றில் சில சரியானதாக இருக்கலாம் சில தவறானதாக இருக்கலாம். ஆனால், நாம் அந்த தருணத்தை நம்முடைய கண்களால் மட்டுமே பார்த்து அறிய முடியும்.

**நன்றி ! இளம் படைப்பாளிகளுக்கு நீங்கள் சொல்ல விரும்பும் வார்த்தைகள் என்ன என்பதோடு நமதிந்த நேர்காணலை நிறைவுசெய்யலாம் என்று நினைக்கிறேன்.**

அறிவுரைகள் சொல்லும் சூழல்களிலிருந்து எப்போதும் நான் தப்பித்து ஓடவே செய்வேன். என்னால் எனது அனுபவத்தை மட்டுமே பகிர்ந்துகொள்ள முடியும். இது அறிவுரை அல்ல. உங்களிடமுள்ள மிகப் பெரிய முதலீடு, உங்களுடைய மனமும் ஆழ்மனமும்தான். திரைப்படங்களில் செயல்பட விரும்பும் யாராக இருந்தாலும் தங்கள் மனதை அதற்குள் முழுமையாக ஈடுபடுத்த வேண்டும். அப்படி செய்தால், உங்கள் படைப்பு எல்லோராலும் புரிந்துகொள்ளப்படும் நேசிக்கப்படும். ஒரு கலைஞன் பெற்றிருக்கக்கூடிய மிக முக்கியமான விஷயமே, குழந்தை பருவத்தில் அமையப் பெற்றிருக்கும் அவர்களுடைய ஆழ்மனம்தான் என்றே கருதுகிறேன்.

**உங்களுடன் நேரம் செலவிட்டதிலும் உரையாடியதிலும் மிகுந்த மகிழ்ச்சி. நன்றி அஸ்கர்.**

நன்றி. இந்நாள் சிறந்த நாளாக அமையட்டும். •

ராம் முரளி <raammurali@gmail.com>


**அம்ருதா சந்தாதாரர் ஆகுங்கள்! இதழ் உங்கள் இல்லம் தேடி வரும்!!**

**சந்தாதாரர் ஆக மூன்று வழிகள்**

| இமெயில்: | அழைக்க | அஞ்சல் |
|---|---|---|
| info.amrudha@gmail.com | 044 24353555<br>9444070000 | அம்ருதா, 1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு, மூன்றாவது பிரதான சாலை, சி.ஐ.டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035 |

| ☑ | காலம் | சந்தா தொகை (ரூ) |
|---|---|---|
| ☐ | ஆயுள் | 5000.00 |
| ☐ | ஐந்து வருடம் | 1300.00 |
| ☐ | இரண்டு வருடம் | 550.00 |
| ☐ | ஒரு வருடம் | 275.00 |

**சந்தா விண்ணப்பப் படிவம்**

உங்கள் காசோலை / வரைவோலையுடன் இந்தப் படிவத்தை அனுப்பவும்

பெயர்:..............................

முகவரி:..............................

..............................

..............................பின்கோடு:..............................

தொலைபேசி:..............................இ-மெயில்:..............................

காசோலை / வரைவோலை அனுப்புபவர்கள் White Lotus Books (P) Ltd என்ற பெயரில் அனுப்பவும்.



# நாய்

**த.அரவிந்தன்**

1

சூரியனின் முதல் கதிர் விழும்
அந்த இடத்தை
முதலில்
அந்த நாய்தான் உணர்ந்தது
இரவு முழுவதும்
உறைந்து போகச் செய்த
பனியிலிருந்து தப்பி
நான்கு கால்களையும் மடக்கிக்கொண்டு
மல்லாக்கப் படுத்தவாறு
அது
தினமும்
அங்கு
வெயில் காய்ந்துகொண்டிருந்தது
ஒரு நாள்
அந்த நாயை விரட்டிவிட்டு
ஒரு பெண்
அந்த இடத்தில்
வெயில் காய்ந்தவாறு
பூ கட்டத் தொடங்கினாள்
குறைந்தபட்சம்
நாய்
குரைக்காவது செய்யும் என நினைத்தேன்
அது
எதுவும் செய்யாமல்
அவளைப் பார்த்து
வாலாட்டியவாறு
தூரவே
நிற்கிறது
அது
வெயிலைக் கட்டி
அவள் தலையில் வைத்ததுபோல
அவள்
பூவைக் கட்டி
அது
தலையில் வைக்கப் போவதுபோல.

2

ச்சூ.... ச்சூ
என்று
குழந்தைக்காக
அவள் நாயை அழைத்தாள்
அது
உடனே
குழந்தையாகத்
தத்தக்குப் பித்தக்கு என்று
காலெடுத்து வைத்து
தவழ்ந்து வந்தது
அவள்
குழந்தையின் சிரிப்பை
ஒரு கவளம் அள்ளி
அதற்குப் போட்டாள்
அது
வாஞ்சையாக
வாலை அசைத்து
ஒரு கவளத்தை அள்ளி
திரும்பப் போட்டது
அவள்
மீண்டும்
ஒரு கவளம் போட்டாள்
அது
மீண்டும்
ஒரு கவளம் போட்டது
பூமியில்
கவளம் என்பது
அன்பு
என்பதைத் தவிர
வேறு என்ன இருக்க முடியும்?

**"த. அரவிந்தன்"** <thavaram@gmail.com>

# கண்ணீரின் உப்புச்சுவை

ஜெகநாத் நடராஜன்
ஓவியம்: சீமா சாஹு

**“நீ நிக்கன்னு நினைச்சுக்கிட்டு முதுகு தேயுன்னு கூப்புட்டேன். அவ வந்து நிக்கா. நா, அம்மணக்கட்டையா நிக்கேன். நீஎங்க போயித்தொலஞ்சன்னு கோபப்படுதாஹ. என்னத்த சொல்ல.”**

**“அறிவு கெட்டவ. கூப்பிட்டா போயிருவாளா அவ. இந்தப் பக்கம் வரட்டும் நல்லா கேக்கேன்” என்று ஆவேசப்பட்டவர்களிடம், வடிவு, “யாரும் எதுவும் பேச வேண்டாம். இந்த விஷயம் தெரிந்ததுபோலக் காட்டிக் கொள்ளவும் வேண்டாம்” என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள்.**

இரவானதும் வடிவு வீட்டு நடைவாசலுக்கு வந்துவிட்டால், ஒருவர் பின் ஒருவராக நான்கைந்து பேர் வந்து கூடிவிடுவார்கள். எல்லோரும் வீட்டுக்குள்ளேயே பகலில் முடங்கிக் கிடப்பவர்கள். பிறர் வீட்டு விசேஷங்களில் கலந்துகொள்ளாதவர்கள். கோவில், குளம் போகாதவர்கள்.

வடிவின் மேற்குப் பார்த்த வீட்டு நடைவாசல் கூடத்தில் விசாலமான மூன்று கருங்கல் படிகள். ஓரமாய் இரண்டு பட்டியற் கற்கள் நேர்க்குத்து வாக்கில்.. ஆறேழு பேர் தாராளமாக உட்காரலாம். மழை வந்தால் கூடத்திற்குள் செல்லலாம். உள்ளே சிமெண்டால் ஆன கட்டில் போன்ற திண்ணை. வெண்ணெய் போன்ற வழுவழுப்பு. ஐந்து ஆள் உயரத்தில் கொல்லம் ஓடு போட்டு, வெயிலோ குளிரோ உள்ளே வராமல் கச்சிதமாகக் கட்டியது அந்த நடுக்கூடம். அதைக்கடந்து, சிமெண்ட் போட்ட பெரிய வாசலையும் கடந்தால் வடிவின் வீடு. அவள் புருஷன் முன் நின்று கட்டிய பணச் செழிப்பைக் காட்டிக் கொண்டிருக்கும் வீடு.



வடிவு உட்பட அங்கு சந்தித்து கொள்ளும் எல்லோரும் அனேகமாகக் கிழவிகள்தான். தூக்கம் வராமல், பொழுது போகாமல், கடந்தகால வாழ்வின் நினைவு அடி நாக்கில் புரண்டு கிடக்கும் ஜென்மங்கள்தான். பகலில் தாயம் ஆடியது போக, ஒரு நாள் சமைத்து இரு நாள் உண்டது போக, அரைத்தூக்கமாய் தூங்கியது போக, இருக்கும் மீதிப் பொழுதை அந்த ஊரில் என்னதான் செய்ய. மாங்காய், நுங்கு, கருப்பட்டி என்று யாராவது ஒரு வியாபாரி தெருவில் கூவிக்கொண்டு வருவான். அவனை வளவுக்குள் வரச் சொல்லி ஒருத்தி வாங்க, நான்கு பேர் பேரம் பேசுவார்கள். பேரம் படிந்ததும் வடிவுதான் காசு கொடுத்து வாங்குவாள். எல்லோருக்கும் கொஞ்சம் கொஞ்சமாகப் பகிர்ந்து கொடுப்பாள். அவள் சாப்பிடும் நேரத்துக்கு அவள் வீட்டுக்குப் போனால், ”இரு சாப்பிடு” என்று உட்காரச் சொல்வாள். வேண்டாம் என்று மறுத்தாலும் சாப்பிடாமல் விடமாட்டாள்.

அவள் சமையல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமான ருசியோடு இருக்கும். மதியம் அவள் சாப்பிடும் நேரத்தைத்தான் கண்டுபிடிக்க முடியாது. அவள் சாப்பிடும் முன் அவள் கணவன் சாப்பிட வேண்டும்.

அவர் எப்போது தூக்கத்திலிருந்து எழுவார், சாப்பிடுவார் என்று சொல்ல முடியாது. காலைக்கும் மதியத்துக்குமாக அவள் சமைத்து வைத்துக் காத்திருப்பாள். பதினோர் மணிக்கு மேல் எழுந்தால் அவர் காலை உணவைச் சாப்பிட மாட்டார். அவர் சாப்பிடாமல் அவளுக்குச் சாப்பிட மனம் வராது.

எழுந்த பின் வெந்நீர் குளியல். சாமி கும்பிடு. 'தினமணி' பேப்பர் படித்து முடித்து பேப்பரை மடிக்கி வைத்து எழுந்தால் அவர் சாப்பாட்டுக்குத் தயார் என்று தெரியும். சாப்பாட்டுக்குப் பின்னால் வெற்றிலை, பாக்கு, புகையிலை என்று அன்றாடப் பாடுகள் அதன் பின் மீண்டும் தூக்கம்.

பாகம் பிரியாள் என்றுதான் வடிவின் பெயரைக் கிழவிகள் கிசுகிசுப்பார்கள். வடிவு அழகி. நீண்ட மயிர் வரம். ஆங்கில வெள்ளைத்தோல், அபூர்வமாக வரும் சிரிப்பு. சிரிக்கும்போது அங்கும் இங்கும் அசையும் கண்கள் காட்டும் வித்தை. வெள்ளைக்கல் மூக்குத்தி, கம்மல், கனத்த கைக் காப்புகள், முறுக்கு சங்கிலியில் மாங்கல்யம், பெரிய உடம்பில் எட்டு முழ சுங்குடி சேலை, உயரமாயும் அகலமாயும் வளர்ந்த கனத்த உடம்பு. அப்போதுதான் குளித்துத் தலைவாரிக் கொண்டவள் போன்ற தோற்றத்தில் எப்போதும் இருப்பாள். அடர்ந்த கத்திரிப்பூ வர்ணத்தில் குங்குமம் இடுவாள். ஏனென்று கேட்க எல்லோருக்கும் ஆசைதான். யாரும் கேட்டதில்லை. மகனும் மகளும் திருமணமாகி குழந்தை குட்டிகளுடன் வெளியூரிலிருக்கிறார்கள்.

விவசாய நாட்களில் மேற்பார்வைக்காக வடிவின் கணவர் வெயிலுக்கு முன் வயலுக்குச் சென்று வெயில் இறங்கியதும் திரும்பி வருவார். இரண்டு பம்ப்செட் கொண்ட ஆறேழு கோட்டை விதைப்பாடு வயல் அவருக்கு இருந்தது. வயலில் நெல் அறுத்து அடித்துக் குவித்தால் குட்டி மலைபோல இருக்கும் என்று சொல்லிக்கொள்வார்கள். மதியச் சாப்பாட்டை அடுக்குச் சட்டியில் யாராவது எடுத்து போவார்கள். அதில் திரும்பி வரும் மிச்சம்தான் அவளுக்கு மதியச் சாப்பாடு. எத்தனை மணி ஆனாலும் காத்திருப்பாள். அப்போது கூட வடிவு வெளியே வர மாட்டாள். வீட்டுக்குள் எதாவது வேலைகளைச் செய்து கொண்டிருப்பாள்.

மாலை நேரத்தில் வடிவு வீட்டு வாசலில், திண்ணையில் கூட்டம் கூடும். வடிவின் கணவருக்கு ஊரில் நல்ல மதிப்பு உண்டு. குடும்ப சண்டைகள், கொடுக்கல் வாங்கல், தண்ணீர் தகராறு என்று எதாவது பஞ்சாயத்துத் தினமும் நடக்கும். சண்டை, சத்தம். சச்சரவுக்குப் பின் அடங்கும். புருஷனின் பார்வைக்குப் படாமல் எங்காவது நின்று வடிவு வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பாள். அபூர்வமாக அவர் அவளைப் பார்த்த கணங்களும் உண்டு. நேரம் இரவு பத்து மணியைத் தொடும்போது. மெல்லியதாக மூன்று தோசைகள் வார்ப்பாள். அம்மியில் அதற்கு முன் தொட்டுக்கொள்ள எதாவது துவையல் அரைத்திருப்பாள். சாப்பாட்டுக்குப் பின் அவளே கறந்த பாலை காய்ச்சி நுரை பொங்க ஆற்றிக் கொடுப்பாள். அதன்பின் ரேடியோவில் அவர் கொஞ்சம் சங்கீதம் கேட்பார். நள்ளிரவுக்குக் கொஞ்சம் முன்னால் கதவு தாளிடப் பட்டு விளக்கு அணைக்கப் படும்.

அதிகாலையில் தொழுவத்தில் பசுக்கள் சத்தமிட்டு அவளை எழுப்பும்; கொல்லையிலிருக்கும் வைக்கோல் போரில் வைக்கோல் பிடுங்கி போடுவாள். பசுஞ்சாணம் கரைத்து வாசல் தெளித்து கோலம் போட்டு நிமிர்கையில் பொழுது விடிந்திருக்கும். பின் பால் கரப்பாள். பால் வாங்க, தயிர் வாங்க ஆட்கள் வருவார்கள். மிஞ்சிய தயிரைக் கடந்து வெண்ணெய் எடுத்து உரியில் போடுவாள். பின் சமைக்க ஆரம்பிப்பாள். வாரத்தில் ஒருநாள் முருங்கை இலை போட்டு நெய் உருக்குவாள். நாளின் பொழுதுகள் நகரும்.

மதியப் பொழுதில் திடீரென்று வடிவு வாசலுக்கு வந்தாள் அவள் கணவர் வீட்டிலிருக்கிறார் என்று அர்த்தம். வாசலில் வடிவைப் பார்ப்பவர்கள் அவளை நோக்கி வருவார்கள். அவள் உள்ளே நடப்பாள். அவர்கள் அவளைப் பின் தொடர்வார்கள். விறகடுப்பில் பெரிய செப்புப்பானையில் வெந்நீர் கொதித்துக் கொண்டிருக்கும். அவள் ஒரு பக்கமும் வந்தவர்கள் ஒரு பக்கமுமாகச் சேர்ந்து தூக்கி அங்கணத்தில் வைப்பார்கள். பெரிய அங்கணம். கொஞ்ச நேரத்தில் அவள் கணவர் குளிப்பார், அவள் இலை அறுத்துக்கொண்டு வருவாள். அவர் சாப்பிடுவார். அதன்பின் அதே இலையில் அவள் சாப்பிடுவாள்.

அவள் வாசலுக்கு வந்ததைக் கவனித்தவர்கள் நேரத்தை மனக் கணக்கிட்டு, அவள் சாப்பிடும் நேரத்தில் அவளைப் பார்க்க வருவார்கள். பெரும்பாலும் கருப்பாயி ஆச்சிதான் நெளிந்த டம்ளரைத் தூக்கிக் கொண்டு மோர் வாங்க என்ற சாக்கில் வருவாள். வடிவோடு அமர்ந்து சாப்பிட்டுத் திரும்புவாள். சாப்பிட்ட வகைக்காக சின்ன சின்ன வேலைகளைச் செய்து கொடுப்பாள். கத்திரிக்காய், தக்காளி என்று அதற்கும் எதாவது வடிவு கொடுப்பாள். வடிவோடு சாப்பிட்ட கதையை இரவுச் சந்திப்பில் கருப்பாயி சொல்வாள். வடிவு தனக்கு மட்டும்தான் அப்படி செய்கிறாள் என்று அவள் பேச்சில் பெருமை பொங்கும். யார் போனாலும் அவள் அப்படித்தான் நடந்து கொள்வாள் என்று அங்கிருக்கும் எல்லோருக்கும் தெரியும். ஆனால், கருப்பாயின் சாமர்த்தியம் அவர்களுக்கு வராது.

ஒரு நாள்,"என்ன ஒரே சிரிப்பா இருக்கு'' என்று கேட்டுக்கொண்டே வடிவு வந்தாள். எல்லோருக்கும் ஆச்சரியம்."அவுஹ வீட்ல இல்லையா வெளியூரு எதாவது போயிருக்காகளா?'' என்று கேட்ட கேள்விக்கு, அவள் பதில் சொல்லவில்லை. அன்று மட்டும் தற்செயலாக வந்ததாக எல்லோரும் நினைத்துக்கொண்ட போது, தொடர்ந்து தினமும் வர ஆரம்பித்தாள். முகம் தெரியாத இருள் கவிந்து கிடக்கும் அந்த இடத்தில் எல்லோரும் ஊரைக் கூட்டிச் சிரிக்கையில், அவள் சத்தமின்றிச் சிரிப்பாள்.

இரவு பத்து மணிக்குமேல் கடைசியாக ஊரைக் கடக்கும் பேருந்தில் யாராவது இறங்கி அவர்களைக்

கடந்து நடந்தால், கருப்பாயி அவர்களை வம்புக்கு இழுப்பாள்."வாங்கிட்டுப் போறதுல கொஞ்சம் குடுத்துட்டுப் போறது" என்பாள். வந்தவர்கள் வேறு வழியில்லாமல் கொஞ்சம் கொடுத்துவிட்டுத்தான் நடப்பார்கள். பெரும்பாலும் சீனிச்சேவு, காரச்சேவு, திராட்சை, பலாப்பழம், கொய்யா இருக்கும்."வேண்டாம் வேண்டாம்" என்றுவிட்டு ஆளாளுக்கு கொஞ்சம் எடுத்துக்கொள்வார்கள். வேகமாக யாராவது நடந்தால்,"என்ன வேகம் கூடுதலா இருக்கு. பத்து மணி பஸ்ல வந்து இறங்குவேன் தயாரா இருன்னு சொல்லிட்டுத்தான் வெளியூர் போனிய போலருக்கு" என்பாள். சிரிப்பு கிளம்பி அடங்க வெகுநேரமாகும்.

அப்படி இப்படி கொஞ்சம் பொழுது கழியும். காற்று கூதலோடு வீசத் தொடங்கும்போது பேச்சு களை கட்டும், ஆந்தை அலறல் கேட்கும். ஊரில் தூங்கிக் கொண்டிருப்பவர்கள் கிழவிகளின் வாயில் கடிபடுவார்கள். சோகம், சந்தோஷம், கோபம் என்று பல உணர்வுகள் பொங்கி வழியும். ஒரு கட்டத்தில் அவர்கள் பேச்சுக்கு ஈடு கொடுக்க முடியாமல்,"காலைல சீக்கிரம் எழுந்திருக்கணும்" என்பாள் வடிவு. பின் அவர்கள் கலைவார்கள்.

வடிவு நடைவாசலுக்கு வருவது, அவர்களோடு பேச்சில் கலந்துகொள்வதெல்லாம் கொஞ்ச நாளாகத்தான். ஏன் இந்த மாற்றம் என்பதைக் கருப்பாயிதான் முதலில் யோசித்தாள். பின் ஒவ்வொருவரிடமும் அதே கேள்வி இருப்பதை அறிந்துகொண்டாள். எல்லோருமாகச் சேர்ந்து, அந்த ஒரே விஷயத்தை யோசித்தும் காரணம் பிடிபடவில்லை. ஏன் ஏனென்று இன்னும் ஆர்வம் தந்தது.'எதற்குப் பெரிய இடத்துப் பொல்லாப்பு' என்று பூவு ஒதுங்கிக்கொண்டாள். ஆனால், கருப்பாயிக்கு இருப்புக் கொள்ளவில்லை. 'யோசித்து யோசித்துப் பார்த்தாள். இத்தனை வருடமாக வாசலுக்கே வராதவள். அளந்து அளந்து அபூர்வமாகப் பேசுபவள், எல்லோரையும் முந்திக்கொண்டு வாசலுக்கு வருவது ஏன்?' என்று ஆன வழிகளிலெல்லாம் யோசித்துத் தோற்றாள். மதியச் சாப்பாட்டு வேளைகளில் வடிவை வலுக்கட்டாயமாகசந்தித்தாள்.அப்படியும்இப்படியும் பேசி எதாவது ரகசியம் கசிகிறதா என்று பார்த்தாள். வடிவு அதற்கு இடமே கொடுக்காமலிருந்தாள்.

வடிவுக்கு ஒன்று மட்டும் தெரிந்திருந்தது. அந்த இரவுக் கூடிக் குலாவலில் ஊரின் எல்லோர் ரகசியங்களும் எப்படியாவது வந்து விடுகின்றது என்பதே அது. தன்னைப் பற்றி அவர்கள் பேசுகிறார்களா? என்று கிராதிக் கம்பிகளுக்குப் பின் இருட்டில் அமர்ந்து பேன் சீப்பால் தலை வாரிக்கொண்டு காத்திருந்து காதைக் கூர்மையாக்கிக் கேட்டுப் பார்த்தாள். சுத்தமாக அவள் பேச்சு ஏதும் இல்லை. நாள் கணக்கில் காத்திருந்தும் இல்லை. அதன் பின்தான் அவளது வெளிப் பிரவேசம்.

ஆரம்பத்தில் கிழவிகள் வடிவிடம் நெருக்கம் காட்டாமல் அமைதியாகத்தான் இருந்தார்கள். பணக்காரி. அவள் மன ஓட்டம் எப்படி என்று தெரியாது. எதாவது வருத்தம் வந்துவிட்டால் அவளிடமிருந்து கிடைக்கும் உதவிகள் நின்று போகும் என்றெல்லாம் யோசித்து, அவள் தன்னை நெருக்கமாக்கிக் கொண்டபிறகுதான் மெல்ல மெல்ல அவளைச் சேர்த்துக்கொண்டார்கள். அவர்களோடு ஒன்றாகியதும் அவள் சிரிப்பின் கனம் கூடிற்று. தெருப் புழுதியைச் சுருட்டிக் கொண்டு வரும் சூறைக் காற்றிலும் காற்றோடு கலந்து வந்து நனைத்துப்போகும் சாரலிலும் அடித்து தெருவில் ஆறாய் ஓடும் அடை மழைக் காலத்திலும் அவர்கள் பேசினார்கள். சில நாள் சோளப் பொறி, சிலநாள் வேர்க் கடலை, ஒருநாள் கடலை தேங்காய் என்று வடிவு கையோடு எடுத்து வருவாள். மரணம், கல்யாணம். கோவில் கொடை, வெளியூரிலிருப்பவர்கள் வருகை, குடும்ப சண்டைகள், கைகலப்புகள் என்று அவர்கள் பேசிக் கொள்ள அன்றாடப் பாடுகள் எதாவது ஊரில் இருந்தன. ஆனால், வடிவின் வருகை பற்றிய காரணம் கிழவிகளுக்குக் கிடைத்தபாடில்லை என்பதால் எல்லோருக்கும் அதன் மீது ஒரு கண்ணிருந்தது.

அண்டி மாம்பழக்காரனை தெருவில் நிறுத்திவிட்டு கருப்பாயி வடிவிடம் சொல்லப் போனாள். அவன் வந்தால் சொல்லச் சொல்லியிருந்தாள். வடிவுக்கு ஏனோ அந்தப் புளிப்பும் கடித்ததும் நாக்கில் ஏறும் சுரீரென்ற உணர்வும் பிடித்திருந்தது. முன் வாசல் அடைத்துக் கிடந்தது. ஒட்டிய இரண்டாவது வீட்டு வாசலுக்குப் போனாள். வடிவு பேசிக் கொண்டிருந்தாள். யாருடன் என்று தெரியவில்லை. எதிரிலிருந்து பதில் சத்தமில்லை. அதை அவள் எதிர்பார்க்கவுமில்லாதது போல வேகமாக ஒப்பித்து கொண்டிருந்தாள்."கடையநல்லூரிலிருந்து மிளகாய் வியாபாரி வந்தார். விசாரித்தார். நாளை வருவதாகச் சொன்னார். தென்காசி நெல் வியாபாரி வந்து பணம் கொடுத்து விட்டுப் போனார்" என்று வடிவு மட்டும் தனியே பேசிக் கொண்டிருப்பதாகக் கருப்பாயி முதலில் நினைத்தாள். அதன் பின்னர் அவள் வடிவின் குரல் சென்ற திசையைப் பார்த்த போது, சற்று தள்ளி வடிவின் கணவர் அமைதியாக சாப்பிட்டுக் கொண்டிருந்தார். வடிவின் குரலில், கணவனோடு பேசும் எந்த உணர்வும் இல்லை. அவரும் ஒரு வானொலிச் செய்தியை கேட்டுக் கொண்டிருப்பது போல கேட்டுக் கொண்டு தலையாட்டியபடி சாப்பிட்டுக் கொண்டிருந்தார். நிற்பதா போவதா என்ற குழப்பத்திலிருந்த கருப்பாயியை வடிவு கவனிக்கவில்லை.

ரகசியத்தின் ஒரு முனையைக் கண்டுகொண்ட சந்தோஷம் கருப்பாயியைக் கிறுகிறுக்க வைத்தது. அங்கு இன்னும் நிற்பது மரியாதையாக இருக்காது என்று திரும்பி வந்துவிட்டாள். வடிவுக்குக் கொடுக்க தன் காசில் சில அண்டி மாம்பழங்களை வாங்கிக்கொண்டாள்.

வடிவும் புருஷனும் பேசிக் கொள்வதில்லை என்ற விஷயத்தை யாரோ சொல்லிக் கேள்விப்பட்டதாக கருப்பாயி முதலில் கிழவிகளிடம் கசியவிட்டாள்."வாய் இருக்குன்னு என்னவெல்லாம் பேசறாளு; அவங்களுக்குள்ள என்ன சண்ட வந்துறப் போகுது" என்று கிளறி விட்டாள். அன்றிரவின் சந்திப்பில்

வடிவுக்கு கருப்பாயி அண்டி மாம்பழங்களைக் கொடுத்தாள்."எப்போ வாங்கினிய? என்ன கூப்புட்டிருக்கலாமே, நா இங்கதான இருந்தேன்?" என்று கேள்விகளாகக் கேட்ட வடிவு, வீட்டுக்கு கருப்பாயி வந்துபோனதைக் கண்டுபிடித்துவிட்டாள். அதன்பின் இறுக்கமான மௌனமே வடிவிடம் இருந்து வந்தது. கிழவிகள் அதை உணர்ந்து பேச்சை வேறு பக்கம் திருப்பினார்கள். அடுத்த நாள் அவள் வரவில்லை. அவர்களும் அது குறித்துப் பேசவில்லை.

வடிவு, வழக்கம்போல வராண்டா தாண்டிய கிராதிக் கம்பிகளுக்குப் பின் இருந்து, அமைதி காத்து காதுகளைக் கூர்மையாக வைத்திருந்தாள்."வடிவ காணல தூங்கிட்டா போலருக்கு'' என்று ஒரு குரல் மட்டும் ஒலித்தது. மறுநாள் கலந்து கொண்டவள்,"ஒரே அலுப்பு சீக்கிரமே நேத்து தூங்கிட்டேன்" என்று அவர்கள் சொன்னதையே அவர்களிடம் சொன்னாள். கருப்பாயிக்குப் பொய் புரிந்து போய்விட்டது.

பின்னொருநாள், வடிவு அண்டி மாம்பழங்களை வாங்குவதைக் கருப்பாயி பார்த்தாள். அருகே சென்றாள். அவளுக்கும் நான்கு கிடைத்தது."சாப்பிடாச்சா? என்ன சமையல்?'' என்றெல்லாம் விசாரித்தாள். அது புதிதாக இருந்தது. ஒன்றைத் தொட்டு இன்னொன்றை இழுத்து வடிவு பேசிக்கொண்டே போனாள். அதுவும் புதிதாக இருந்தது."அவுஹ வீட்ல இல்லையா?'' என்று கருப்பாயி ஆர்வம் தாளாமல் கேட்டாள்."குளிக்காஹ" என்றாள் வடிவு உப்புச் சப்பில்லாமல். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

**எல்லோருக்கும் அவள் மீது வருத்தமும் முன்னெப்பொதுமிருந்ததைவிட அதிகமான பிரியமும் உண்டாயிற்று. அதன் பின் வடிவு வாசலுக்கு வருவதும் வந்தால் முன்புபோல கலகலப்பாகப் பேசுவதும் குறைந்து பின் நின்றே போயிற்று.**

சம்பந்தமில்லாமல் வடிவு புன்னகை பூத்தாள். கருப்பாயியும் சிரித்து வைத்தாள். தெருவில் போன யாரையோ வடிவு வலுக்கட்டாயமாகக் கூப்பிட்டுப் பேசினாள். இடையே தன்னைக் கருப்பாயி கவனிக்கிறாளா என்றும் பார்த்துக் கொண்டாள். அன்றிரவு வாசலுக்கு வந்த வடிவு பேச்சில் கலந்துகொள்ளாமல் அமைதியாக இருந்தாள். அன்று எல்லோருக்குள்ளும் அமைதி குடிகொண்டுவிட்டது. அவரவர் எதையெதையோ யோசித்தவண்ணம் அமைதியாக இருந்தார்கள். நான்கைந்து நாய்கள் ஓடி வந்தன. கூடலுக்கு தயாரான நாய்களின் மீது பூவு,"எங்கன வந்து" என்றபடி கல்லை எடுத்து எறிந்தாள்."பூவுக்குப் பொறாமை" என்று யாரோ சொன்னார்கள். அப்போது மட்டும் சின்ன சிரிப்பு எழுந்து, அதே வேகத்திலேயே காணாமலும் போய்விட்டது.

வடிவு திடீரென எழுந்தாள்,"வரேன் அவுஹ வேலையா நாள மதுரைக்குப் போறாஹ" என்றுவிட்டு வேகமாக நடந்தாள். அவள் வந்த நாளிலிருந்து அப்படி இடையில் போவது அதுதான் முதல் முறை. அதன் பின்னர் அவர்களும் கலைந்தார்கள்.

பகலில் சமைத்த பெண்கள் கருப்பாயி வீட்டில் தாயம் விளையாடக் கூடினார்கள். பூவு சில செய்திகளை விசாரித்து வந்திருந்தாள். வீட்டு வேலைக்கு ஒத்தாசை செய்ய வடிவு வீட்டுக்குள் வந்துபோன செல்லக்காவை வடிவு கோபமாக திட்டிக் கொண்டிருந்தாள் என்றும், யாரோ பார்த்த போது ஒன்றும் நடவாதது போல அமைதியாகிவிட்டாள் என்றும் தகவல் சொன்னாள்.

"காசு பணத்ல கைய வச்சிருப்பா. அவள பத்தி ஊருக்கே தெரியும். அவள எதுக்கு வீட்டுக்குள்ள விடுதா'' என்று கருப்பாயி பேச்சை முடித்துவிட்டாள்.

அன்றிரவு கணவர் ஊரில்லாததால் வடிவு சீக்கிரம் வருவாள் என்று எதிர்பார்த்தார்கள். அவள் எல்லோருக்கும் கடைசியாகத்தான் வந்தாள்."வேலையா?'' என்று கேட்டபோது அமைதியாக இருந்தாள். பக்கத்து அரச மரத்து இலைகளில் காற்று சலசத்துக்கொண்டிருந்தது. ஊரில் புதிய செய்திகளில்லை. ரேஷன் கடையில் அன்று மாலை பிரித்த அரிசி மூட்டையில் அரிசி நன்றாக இருப்பதாக பூவு சொன்ன போது, காலையில் முதல் ஆளாகப் போய்விடும் முடிவைக் கருப்பாயி எடுத்தாள். பொறுத்துப்பொறுத்துப் பார்த்து விட்டு பூவு கேட்டாள்."செல்லக்கா வீட்ல எதாவது கை வச்சிட்டாளா? அவ கை கொஞ்சம் நீளம். யாரும் அவள கிட்ட சேக்க மாட்டோம்," என்பதற்குள் வடிவு அழுதுவிட்டாள்.விசும்பி விசும்பி அழுதாள். எல்லோரும் திடுக்கிட்டுப் பார்த்தார்கள்."கொஞ்சம் நீளமாத்தான் செல்லக்கா கைய வச்சுட்டா. தரிக்கணும்" என்று விசும்பினாள்.

"நீ அவள திட்டிக்கிட்டு இருந்தத யாரோ பாத்ததா சொன்னாங்க" என்று கருப்பாயி சொல்வதற்குள்,"வேற யாரு பாத்தா, பூவுதான் பாத்தா" என்ற போது,"அப்படி திட்டற அளவுக்கு என்ன செஞ்சா செல்லக்கா'' என்று பூவே பேச்சைத் தொடர்ந்தாள்.

"என்னத்த சொல்றது. அன்னிக்கு வெந்நிப் பானைய தூக்கி அங்கணத்ல வச்சுட்டு, அம்மி குத்தறவன் சத்தம் கேட்டுச்சேன்னு வெளில வந்தேன். இந்த வீட்டுக்குப் போனான், அந்த வீட்டுக்குப் போனான்னு ஆளாளுக்குச் சொன்னாஹ. அங்கனயும் இங்கனையுமா அலைஞ்சுட்டு அவனப் புடிக்க முடியாம வீட்டுக்குள்ள போறேன், மாட்டுக்கு தண்ணி வைக்க வந்த செல்லக்கா அவுஹளுக்கு முதுகு தேய்ச்சு விட்டுக்கிட்டு இருக்கா" என்று விம்ம...

"என்ன சொல்லுத வடிவு, வெளக்குமாத்த எடுத்து

நாலு சாத்து சாத்த வேண்டியதுதான" என்றாள் கோபமாக கருப்பாயி."யாரச் சாத்தச் சொல்லுத அவளையா அவுஹளையா?"

கனத்த மெளனம் அங்கு உருவானது. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள். வடிவு விசும்பிக் கொண்டேயிருந்தாள். ஆளாளுக்கு அவள் கையைப் பிடித்தார்கள்.

"அவகிட்ட கேட்டியா?"

"கேட்டேன். நா வந்தேன். ஏழா வா வந்து முதுகு தேய்ச்சு விடுன்னு அவுஹதான் கூப்புட்டாஹ. ஐயா கூப்புடும்போது மாட்டேன்னு சொல்ல முடியுமான்னு சொல்லுதா?"

"நெசமாவ சொல்லுத. அவுஹ அப்படியெல்லாம் கூப்பிடுத மனுஷனா? கேக்க வேண்டியதுதான."

"அவுஹ கிட்ட கேக்காம விடுவனா. கேட்டேன். நீ நிக்கன்னு நினைச்சுக்கிட்டு முதுகு தேயுன்னு கூப்புட்டேன். அவ வந்து நிக்கா. நா, அம்மணக்கட்டையா நிக்கேன். நீ எங்க போயித்தொலஞ்சன்னு கோபப்படுதாஹ. என்னத்த சொல்ல."

"அறிவு கெட்டவ. கூப்பிட்டா போயிருவாளா அவ. இந்தப் பக்கம் வரட்டும் நல்லா கேக்கேன்" என்று ஆவேசப்பட்டவர்களிடம், வடிவு,"யாரும் எதுவும் பேச வேண்டாம். இந்த விஷயம் தெரிந்ததுபோலக் காட்டிக் கொள்ளவும் வேண்டாம்" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள்.

எல்லோருக்கும் அவள் மீது வருத்தமும் முன்னெப்பொதுமிருந்ததைவிட அதிகமான பிரியமும் உண்டாயிற்று. அதன் பின் வடிவு வாசலுக்கு வருவதும் வந்தால் முன்புபோல கலகலப்பாகப் பேசுவதும் குறைந்து பின் நின்றே போயிற்று.

இதெல்லாம் நிகழ்ந்த சில வாரங்களில், சுள்ளென்று வெயிலடித்த கோடை காலத்தின் ஒரு வெம்மைப் பொழுதில் வடிவு வீட்டுக்கு கருப்பாயி மோர் வாங்கப் போனாள். பெரிய பித்தளைச் சொம்பில் தண்ணீர் மோந்து ஆரடி உயர வடிவின் கணவர் குளிக்கும் நீர்ச் சத்தம் அருவிச் சத்தம் போலக் கேட்டது. அங்கனத்தை நோக்கி நீள நிழல் விழ, வடிவுதான் என்று நினைத்து முன்னே போகப் போன கருப்பாயி முன் நிழலை தொடந்து போகும் செல்லக்காவைப் பார்த்தாள். நீர்ச் சத்தம் நின்று பேச்சுச் சத்தம் தொடர, நடுக்கம் கண்ட கருப்பாயி திரும்பி நடக்க ஆரம்பித்தாள். அவள் தன் வீட்டிலிருந்து வெளியேறுவதைப் பலசரக்குக் கடையிலிருந்து எதோ வாங்கிக் கொண்டு வந்த வடிவு பார்த்தாள்.

அன்றிரவு அனைவரும் கூடினார்கள். அமைதியாக இருந்தார்கள்."என்ன சத்தத்த காணல" என்று வந்த வடிவுதான் ஆரம்பித்தாள். எல்லோரும் அவளை ஆச்சர்யமாகப் பார்த்தார்கள்.

"மத்தியானம் மோர் வாங்கலாம்ன்னு வந்தேன்.." கருப்பாயி மெல்ல பேச்சை ஆரம்பித்தாள்.

"தெரியும், பாத்தேன். நா வெளில வந்தேன். ரொம்ப நாளா அவுஹ குளிக்கும்போதெல்லாம் எதாவது சாக்குப் போக்குச் சொல்லி வெளிலதான் வந்துக்கிட்டிருக்கேன்." அவள் பேச்சு கமறியது.

"செல்லக்காவ சும்மா விடக் கூடாது. அன்னிக்கே சொன்னேன் நீதான் கேக்கல." பூவு கொதித்தாள்.

"அவள குறை சொல்லி என்ன பண்ணச் சொல்லுத. தப்பு அவ கிட்ட மட்டுமா இருக்கு." வடிவு தீவீரமாகப் பேசினாள்.

"அப்ப இப்படியே விட்டுடப் போறியா? கண்டும் காணாமலும் இருந்துரப் போறியா?"

"உங்களுக்கு தெரியாததா? செல்லக்கா புருஷன் ரோஷக்காரன். அவங்கிட்ட சொன்னா வெட்டிப் போட்டுருவான். பாவம் மூணு புள்ளைங்க.. அதுங்கள நினைச்சுப் பாத்தேன்." வடிவு தீவீரத்துடன் சொன்னாள்.

"என்ன இருந்தாலும்.."

"தப்புன்னு தானா தெரியணும். அதுக்கு ஒரு நேரம் வரும். அவுஹளோட பேச்சுவார்த்த கிடையாது. அவள ஜாட மாடையா திட்டி விட்டேன். அவ வரத நிறுத்தினா, அவுஹ ஆள் அனுப்ப, அவ புருசனே ஐயா கூப்பிட்டாஹன்னு அனுப்பி விடுதான். எனக்கும் கோபம் வருது. என்ன செய்ய. நா அவளோட புள்ளைகளத்தான் நினைச்சுக்கறேன். பாவமில்லையா? அவ இல்லன்னா அதுங்க என்ன ஆகும்."

"நீ அதுங்களுக்காக பாவம் பாத்தா உன் வாழ்க்கை என்ன ஆகும் வடிவு. செல்லக்கா புருஷன் கோபத்துல அவுஹ மேல கைய வச்சு, ஒண்ணு கெடக்க ஒன்னு ஆயிடுச்சுன்னா உன் வாழ்க்கை என்ன ஆகும்.?"

"இனி எனக்கு என்ன வாழ்க்கை. என்ன எடுத்துக்கோன்னு சாமிய கும்பிடுதேன். என்னால ஒருத்தி சாவணுமா, மூணு புள்ளைங்க அனாத ஆகணுமா. விடுங்க வேற விஷயம் எதாவது பேசுவோம். உங்க கூட பேசி சிரிச்சுதான் மிச்ச காலத்த ஓட்டணும்."

"எப்படியும் எதாவது ஒருநாள் தெரியத்தான போகுது."

"நீங்க யாராவது சொன்னாத்தான் தெரியும். யாரும் எனக்காகச் சொல்லாதீங்க. ஆரம்பிச்ச மாதிரியே அது முடியும். எம்புட்டு தூரம் போயிரும், ரொம்ப தூரமெல்லாம் போக முடியாது" என்று வடிவு சூழலைச் சகஜமாக்கினாள்.

ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியா இருளில் அனைவரும் அமைதியாக இருந்தார்கள். வடிவின் கண்ணீர் மெல்லக் கசிந்து வழிந்தது. அவள் துடைத்துக்கொள்ளும்போது நாவில் பட்டு உப்புக் கரித்தது. தனக்கு நெருக்கமானவர்களுடன் அமர்ந்திருந்த அவளுக்குத் தொடர்ந்து அழுது கொண்டேயிருக்கவேண்டும் போலிருந்தது. ●

**ஜெகநாத் நடராஜன்**
<jaganathanvr4@gmail.com>

# லின் நாட்டேஜ்
# இந்த நூற்றாண்டின் நாடக மேதை

ட்டி.ஆர். நடராஜன்

**என் ஆய்வும் என் எழுத்தும் ஒன்றுக்கொன்று சம்பந்தம் கொண்டவையல்ல என்று நான் எனக்குள் ஒரு கட்டுப்பாட்டை விதித்துக்கொண்டேன். இரண்டரையாண்டு ஆய்வறிக்கையைத் தூக்கி எறிந்துவிட்டேன். அதன் பின் என் நாடகத்தை எழுத ஆரம்பித்தேன். அதன் வரிகள், வார்த்தைகள் என்னுடையவை. எனக்கு மட்டுமே சொந்தமானவை. நேர்காணல்களைப் பிரதி எடுக்க நாடக ஆசிரியன் எதற்கு?**

தலைசிறந்த ஆளுமைகள் என்று நால்வரைத் தேர்ந்தெடுத்து, 'நியூயார்க் டைம்ஸ்' சென்ற ஆண்டு (2021) கொண்டு வந்த இதழில் ஒரு நடிகை, ஓர் ஓவியன், ஒரு நாடக ஆசிரியர், ஓர் ஆடை வடிவமைப்பாளர் என்று நான்கு பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் இடம் பெற்றார்கள். அதில் நாடக ஆசிரியராகத் தேர்வு பெற்றவர் லின் நாட்டேஜ்.

ஐம்பத்தெட்டு வயதாகும் லின் இப்போது ப்ரூக்லினில் வசிக்கிறார். கொலம்பியா பல்கலைக் கழகத்தில் நாடக இயல் துறையில் பேராசிரியராகப் பணியாற்றிவருகிறார்.இருமுறைநாடகங்களுக்காகப் புலிட்சர் பரிசு பெற்ற ஒரே பெண் நாடக ஆசிரியர் உலகில் இவர் ஒருவர்தான்.

பள்ளி ஆசிரியையாகச் சேர்ந்து பின்னர் அதே பள்ளியின் முதல்வருமாக வளர்ச்சி பெற்ற லின்னின் தாய், அவருடைய கணவருடன் (அவர் மனநல மருத்துவர்) சேர்ந்து ஆப்பிரிக்க அமெரிக்கக் குடிமக்களுக்குக் கிடைக்க வேண்டிய அடிப்படை சமூக நீதிகளுக்கும் குடியுரிமைக்கும் போராடியவர்கள். லின்னின் பெற்றோர்கள், அவரை இளம் வயதிலேயே இசை, நாடக நிகழ்ச்சிகளுக்கு அழைத்துச் சென்று அவற்றில் ஈடுபாடு கொள்ள வைத்தார்கள். நாடகங்கள், நாடக ஆசிரியரது மட்டுமல்லாது பார்வையாளரின் சுய வெளிப்பாட்டையும் உணர்த்தும் திறன் வாய்ந்தவை என்று லின் உணர்ந்த தருணமது. பள்ளி நாள்களிலும் கல்லூரியில் படிக்கும் காலங்களிலும் அவர் பல நாடகப் போட்டிகளில் பங்குகொண்டு பரிசுகள் பெற்றார். அவருக்குப் பிரௌன் பல்கலைக் கழகத்தில் மருத்துவம் படிக்க ஸ்காலர்ஷிப் கிடைத்தது. ஆனால், தனக்கு மருத்துவத்தை விட நாடகம் மிகவும் பிடித்திருக்கிறது என்று அந்த வாய்ப்பை மறுத்துவிட்டார். யேல் பல்கலைக் கழக நாடகப் பள்ளியில் முதுகலைப் பட்டம் பெற்றார்.

தனது வாழ்க்கையில் தனக்கு ஏற்பட்ட மிகப் பெரிய இழப்பு ஜாஸ் இசையைக் கற்றுக்கொள்ளக் கிடைத்த வாய்ப்பை நழுவ விட்டதுதான் என்று லின் கருதினார். நியுயார்க்கிலிருந்த இசை மற்றும் கலை கற்பித்த உயர்நிலைப் பள்ளியில் பியானோ வகுப்பில் சேர்ந்த லின் சேர்ந்த முதல் நாளே அங்கிருந்து வெளியேறிவிட்டார். அதற்கு காரணம் வகுப்பிலிருந்த மற்ற மாணவர்கள் அவரை ஏளனமாகப் பார்த்ததும் பேசியதும் கூச்சலிட்டதும்தான். தன் வாழ்வில் எடுத்த துக்ககரமான முடிவு அது என்று அவர் ஏக்கம் கொண்டிருந்தார்.

தன்னை ஒரு நாடக ஆசிரியராக மட்டும் மற்றவர்கள் பார்ப்பதை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. எழுத்து, இசை, நாடகம், நாட்டியம், ஓவியம், கூத்து ஆகிய ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே பாத்தி கட்டி அதில் ஏதேனும் ஒன்றுக்குள் மூழ்கி விடும் வழக்கத்தைக் கொண்டாடிய சமூகநியதியை ஒப்புக்கொள்ளாமல், கலைஞன் என்பவன் ஒன்றையொன்று வெறுக்கும் அல்ல, விரும்பி ஆரத் தழுவும் போக்குள்ளவனாக இருக்க வேண்டும் என்று அவர் நினைத்தார்.

தன்னை ஒரு நாடக ஆசிரியர் என்ற சட்டகத்துள் ஆயுள் கைதியாக அடக்கி வைப்பதை ஏற்றுக்கொள்ள முடியாது என்று அறிவித்தார். மாறாக, "நான் யார் என்று மற்றவர்கள் எதற்காகத் தீர்மானிக்க வேண்டும்? இவளுக்கு உகந்தது நாடகம்தான் என்று சொல்லும் உரிமையை யார் மற்றவர்களுக்குத் தந்தது? நான் ஒரு நடிகையாகவும் பிரகாசிக்க விரும்புகிறேன். ஆனால்,

அதிலும் நீ இந்தப் பாத்திரத்திற்குத்தான் லாயக்கு என்று மற்றவர்கள் குறுக்கிட்டு முடிவு செய்வதை அனுமதிக்க முடியாது.

“எனக்கு இப்போது ஐம்பத்தி எட்டு வயதாகிவிட்டது. நான் சுதந்திரமாக இந்த உலகில் நடமாட விரும்புகிறேன். எல்லோருக்கும் எல்லாம் கிட்டும்வாழ்க்கையில்இருபதுவருடங்களுக்குமேலாக நாடகங்கள் எழுதி வரும் நான் மட்டும் எதற்காக அங்கேயே புரண்டு கொண்டு இருக்க வேண்டும்? பல்வேறு விஷயங்களில் என் முழுத்திறமையையும் காண்பிக்க வேண்டும் என்பது என் ஆசை” என்று ஒரு கட்டத்தில் தன மனத்திலுள்ளதைப் பொதுவில் வைத்தார்.

“ஒடுக்கப்பட்ட மக்களைப் பற்றிய சிந்தனை என் நினைவுகளில் படர்ந்திருக்கிறது. அதன் வெளிப்பாடே என் நாடகங்கள். வெளியுலகம் அறிந்திராத பல கதைகள் இம் மக்களால் சொல்லப்படக் காத்திருக்கின்றன. நாடகம் என்ற வட்டத்துக்குள் நடமாடுவதை விட, என் எழுத்துக்களைக் கலை என்கிற விஸ்தீரணத்துக்கு எடுத்துச் செல்ல விரும்புகிறேன். கலாச்சாரம், பண்பாடு பற்றிக் கலை என்பது சொல்ல வேண்டியது என்ன? பொறுப்புணர்வுடன் சொல்ல வேண்டும் என்கிற உந்துதலைத் தவிர, கஷ்டமான கேள்விகளுக்குப் பதில்களைத் தேடும் விடாமுயற்சியும் ஓர் நாடக ஆசிரியரிடம் இருக்க வேண்டியிருக்கிறது. இதுதான் ஒரு கலைஞனது பார்வையின் வித்தியாசத்தையும் தீட்சண்யத்தையும் தீர்மானிக்கின்றது என்று நான் நம்புகிறேன்” என்கிறார் லின்.

**2004**இல் அரங்கேற்றப்பட்டு இன்று வரை மிக அதிகமாக மேடைகளில் உலா வரும், ‘இன்டிமேட் அப்பேரல்’ நாடகம், கிழக்கு ஐரோப்பாவிலிருந்து வரும் அகதிகளும் சிறு கிராமங்களிலிருந்து பெரும் நகரங்களுக்குக் குடிபெயர்ந்துசெல்லும் ஆப்பிரிக்க-அமெரிக்கர்களும் கூடுகையில் கண்டெடுப்பதுதான் என்ன என்னும் கேள்வியை பரிசீலிக்கிறது.

இந்நாடகம் உருவாகக் காரணமாக இருந்தது எதிர்பாராத விதமாக லின்னின் கையில் கிடைத்த அவரது பாட்டியின் பாட்டியுடைய புகைப்படம். பாட்டியின் பாட்டி தையல்காரியாக இருந்தவர். அவரைப் பற்றிக் கேட்க அப்போதுதான் காலமான லின்னின் தாயுமில்லை. லின் அமெரிக்கநூலகத்துக்குச் சென்று பழங் கதைகளைத் தேடுகிறார். அதன் விளைவுதான் இந்நாடகம். சரித்திரத்திலிருந்து மறைந்துவிட்ட, ஓரங்கட்டப்பட்டு விட்ட மனிதர்கள்தான் அவரது கதாபாத்திரங்கள்.

இந்நாடகம், பல கட்டங்களில் படுக்கை உறவுகளின் நெருக்கத்தை சுட்டிக் காட்டுகிறது. உடல் மீது காமம் கொண்ட, ஆனால், மனத்தளவில் அன்பு காட்டாத மனிதர்களின் அடாவடித்தனம், சமூகம் ஏற்படுத்திய கட்டுப்பாடுகளினால் சேர முடியாத காதலர்கள் தமக்குள் கொள்ளும் ஸ்பரிசமற்ற காதல் ஆகியவற்றைப் பற்றி விவரிக்கும் இந்நாடகம் அதன் முடிவில் வாசகனின் மனதில் துக்கத்தை ஏற்படுத்தி விடுகிறது.

இரண்டாண்டுகளுக்கு முன்பு உலகைப் பீடித்த கோவிட் தொற்று நோய் உலகத்தையே ஸ்தம்பித்த நிலைக்குக் கொண்டு சென்றுவிட்டது. இருள் சூழ்ந்த அந்த நாள்கள் தந்த பொழுதைத் தன்னை மறுபார்வை பார்க்க உதவிய தருணமாக லின் மதித்தார். முன்னூறுக்கும் மேற்பட்ட கலைஞர்கள் - நடிகர்கள், இயக்குநர்கள், எழுத்தாளர்கள் - பங்கேற்று, “அமெரிக்க வெள்ளையர் நாடக உலகே! உன்னை நாங்கள் கவனிக்கிறோம்” என்று ஒரு திறந்த மடலை வெளியிட்டார்கள். இதனை உருவாக்கும் பணியில் லின் பெரும்பங்கு வகித்தார்.

அந்த மடல் வேண்டியிருந்த பல கோரிக்கைகளில் மிக முக்கியமான ஒன்று, குறைந்தது ஐம்பது சதவீத கறுப்பின மக்கள் நாடகத் துறையின் பல்வேறு செயல்பாட்டு அரங்கங்களில் பங்குபெற்று செயலாற்ற அனுமதிக்கப்பட வேண்டும் என்பது. அதுவரை தங்கள் பணிகளுக்குப் பண உதவி எதுவும் வழங்கப்படாமல் கறுப்பின மக்கள் ஆற்றி வந்த பல பணிகளுக்கு இனிமேல் பண உதவி கண்டிப்பாக வழங்க வேண்டும் என்ற கோரிக்கையும் அந்த மடலில் இருந்தது.

அக்காலக்கட்டத்தில், பயிற்சி முகாம்களில் திட்டவட்டமான நேரம் நிர்ணயிக்கப்படாமல், வேலை சார்ந்த பல்வேறு வரைமுறைகளைக் காற்றில் பறக்கவிட்டுவிட்டு, வெள்ளை நிர்வாகிகள் கறுப்பினத் தொழிலாளிகள் மீது நிர்ப்பந்தங்களைச் செலுத்தி வேலை வாங்கிக் கொண்டிருந்தார்கள். இவற்றை ஒழுங்குபடுத்தும் முயற்சிகளை எடுக்க ஆயத்தங்கள் செய்யப்பட்டன. முந்திய செயல்பாடுகளின் ஊடே பதுங்கியிருந்த நிறவெறியை ஒழிக்கும் விதமாக, தொற்று நோய்க்கு (கோவிட் 19) பின் திறக்கப்பட்ட திரையரங்குகளில் இளம் படைப்பாளிகளுக்குத் தயாரிப்புப் பொறுப்பைத் தரும் திட்டத்தை லின் கொண்டு வந்தார். கறுப்பின மக்கள் உள்ளே நுழைய முடியாத ஒப்பனை அறைகள், நடிகர் - நடிகைகளுக்கு ஒதுக்கப்பட்ட அறைகள், நாடக அரங்கின் உள் பாதைகள் ஆகியவற்றில் கறுப்பின மக்கள் வேலை செய்ய வாய்ப்பளித்தார்.

**லி**ன் ஒரு வித்தியாசமான படைப்பாளியாகவே மற்றவர்களால் அணுகப்பட்டார். அவர் தேர்ந்தெடுத்த கதைக் கரு, சம்பவங்கள், சம்பாஷணைகள் ஆகிய அனைத்தும் வழக்கமான பாதைகளைத் தவிர்த்தனவாக இருந்தன. அவருடைய நாடகங்களால் கவரப்பட்ட ரசிகர்கள்/வாசகர்களின் மனங்களில் வாழ்வைப் பற்றிப் படர்ந்திருந்த அவரவர் சிந்தனைகளைக் கேள்விக்குறியாக்கி ஆராய வைத்தன, அவரது எழுத்து அவரை ஒரு பத்திரிகையாளராகவும் இனங்காண வைத்தது. பல வருஷங்களுக்குப் பல்வேறு மனிதர்களை வைத்து நேர்காணல்கள் நடத்தினார். மார்க்கெட் ரோட் ஃபிலிம்ஸ் என்னும் திரைப்படக் கம்பனியை நடத்தினார்.

லின் நாடகங்களின் பின்புலங்கள் ஒவ்வொன்றும்



வித்தியாசமாக இருந்தன. அவரது நாடகப் பாத்திரங்கள் மதுபானக் கடை நடத்துபவரை, ஆடைகளை வடிவமைப்பவரை, உலகிலேயே மிகப் பிரமாதமான (?!) சாண்ட்விச் செய்பவரை, திரையுலகில் கொடிகட்டிப் பறக்கும் கனவுகளுடன் வளைய வரும் நடிகைகளை, போர் நடந்த சமயம் பாலியல் பலாத்காரத்துக்கு உட்படுத்தப்பட்டு சிதிலமடைந்த பெண்களை, தொழிற்சாலைக் கடையடைப்பில் வாடி வதங்கி விட்ட தொழிலாளர்களை சித்தரித்து வெளியுலகுக்குக் கொண்டு வந்தார்.

வெகுகாலமாகக் கறுப்பினப் பெண்கள் அவர்களது துறை சார்ந்த தொழில்களில் சிறப்பாகச் செயல்பட்டாலும் ஓரங்கட்டப்பட்டார்கள். அவர்களது தனித்த திறமையால் பிரகாசிக்க வேண்டியவர்கள் கீழே அடங்கிக் கிடப்பவர்களாக நடத்தப்பட்டார்கள். இவர்களை வெளியுலகின் கவனத்துக்கும் பரிசீலனைக்கும் லின்னின் நாடகங்கள் வெளிக் கொணர்ந்தன.

'ரூயின்ட்' என்னும் நாடகத்துக்கு 2009ஆம் ஆண்டிலும் 'ஸ்வெட்' என்னும் நாடகத்துக்கு 2017ஆம் ஆண்டிலும் லின்னுக்கு நாடகத்திற்கான புலிட்சர் பரிசு கிடைத்தது.

பெர்டோல்ட் பிரெக்டின், 'மதர் கரேஜ் அன்ட் ஹெர் சில்ரன்' என்னும் நாடகத்தைத் தழுவி எடுக்க லின் மிகவும் விரும்பினார். முப்பது வருடப் போர் ஒரு பெண்ணின் வாழ்வை எப்படி நாசப்படுத்துகிறது என்பதைப் பற்றிய உலகக் கிளாசிக் நாடகம் அது. அச்சமயத்தில் லின்னும் அவரது இயக்குநரும் கிழக்கு ஆப்பிரிக்காவின் சரித்திரத்தில் காங்கோ போர் பற்றிய விவரணைகளையும் அதிர்ச்சி தரும் உண்மைகளையும் அறிந்தனர். இரண்டாம் உலகப் போருக்குப் பின் ஒன்பது நாடுகளைப் பாதித்து மிக அதிகமான மக்களின் சாவுக்குக் காரணகர்த்தாவாக நடந்தது அப்போர். போர்முனையில் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்ட பெண்களை பற்றிய உண்மைகளை லின் உகாண்டாவில் வசித்த பெண்களுடன் நடத்திய நேர்காணல்கள் மூலம் அறிந்தார். போர் முனைக்குச் சிறிதும் சம்பத்தப்படாத பெண்கள் எப்படிக் குரூரமாக வதைக்கப்பட்டார்கள், ராணுவம் பெண்களை எவ்வாறு ஓர் போர் ஆயுதமாக உபயோகப்படுத்தியது என்பது பற்றிய உண்மைகளைக் கண்டறிந்தார்.

'ரூயின்ட்' நாடகம் இவற்றின் அடிப்படையில் உருப்பெற்று உலகை ஸ்தம்பிக்க வைத்தது. இவ்வுண்மைகள் எதுவும் நாடகம் வெளிவரும் வரை வெளியுலகம் அறிந்திருக்கவில்லை. பத்திரிகைகள் இவை பற்றி ஒரு வரி கூட எழுதியிருக்கவில்லை.

இரண்டாம் புலிட்சர் பரிசு பெற்ற 'ஸ்வெட்' நாடகம் பற்றி 'கார்டியன்' பத்திரிகைக்கு அளித்த நேர்காணலில் லின் குறிப்பிடுகிறார்: "ஓரேகான் ஷேக்ஸ்பியர் நாடக விழாவுக்காக, அமெரிக்கப் புரட்சியின் விளைவுகள் பற்றி நாடகம் எழுதித் தர முடியுமா என்று கேட்டு, நாடெங்கிலுமுள்ள நாடக ஆசிரியர்களுக்கு கடிதங்கள் அனுப்பப்பட்டன. அமெரிக்காவின் எந்தப் புரட்சியைப் பற்றி எழுதுவது என்பது பற்றி எனக்குச் சில வருடங்களாக குழப்பம் ஏற்பட்டிருந்தது. அமெரிக்க உள்நாட்டுப் போரா? குடியியல் உரிமைப்



'ரூயின்ட்'

பிரச்சனையா? என்று சந்தேகங்கள்.

"ஒருநாள் என் சிநேகிதி ஒருத்தியிடம் எனக்கு வந்த மின்னஞ்சலில், அவள், தான் சில காலமாக மிகுந்த மனப் போராட்டத்தில் இருப்பதாகத் தெரிவித்திருந்தாள். அவள் எனக்கு நன்றாகப் பரிச்சயமானவள். அடிக்கடி சந்தித்துக்கொள்வோம். ஆனால், இந்தப் பிரச்சினை பற்றி அதுவரை பேச்சு எழுந்ததில்லை.

"எனவே, அடுத்த நாள் காலையில் நாங்கள் சந்தித்தோம். அப்போதுதான் 'வால்ஸ்ட்ரீட்டை ஆக்கிரமிப்போம்' என்னும் போராட்டம் எழ ஆரம்பித்த நேரம். நாங்கள் அதை பற்றி விரிவாகப் பேசினோம். நாங்கள் பேசிக்கொண்டதனால் எதுவும் பெரிதாக நடந்து விடவில்லை. ஆனால், என் சிநேகிதிக்குத் தான் மட்டும் மனப் போராட்டத்தில் சிக்கித் தவிக்கவில்லை என்னும் உறுதி ஏற்பட்டு விட்டது.

"'வால்ஸ்ட்ரீட்டை ஆக்கிரமிப்போம்' எனக்குள் பல கேள்விகளை எழுப்பியது. பொருளாதார இடர் எவ்வாறு அமெரிக்க வாழ்வின் அர்த்தத்தை மாற்றிவிட்டது என்பதைப் பொது வெளியில் கண்டேன். அமெரிக்கக் கனவில் முதலீடு செய்தவர்கள் தெருவுக்கு வந்துவிட்டார்கள்."

அதே 'கார்டியன்' நேர்காணலில், "ஸ்வெட் நாடகத்துக்கு ரீடிங் நகரத்தை எப்படித் தேர்ந் தெடுத்தீர்கள்?" என்னும் கேள்விக்கு, "நானும் எனது உதவியாளரும் (இருவருக்கும் காரோட்டத் தெரியாது) நியூயார்க்கிலிருந்து சற்று விலகிய தூரத்தில் இருக்கும் இடத்தில் போய்த் தங்க விரும்பினோம். காரோட்டும் அனுபவம் இல்லாததால் எவ்வளவு நேரம் பிரயாணம் செய்ய வேண்டும், எங்கே போக வேண்டும் என்று எதையும் நிச்சயப்படுத்திக் கொள்ளாமல் பயணம் செய்தோம். நியூயார்க்கிலிருந்து மூன்று மணி நேரப் பயணத் தொலைவில் அமெரிக்காவிலேயே வறுமை மிக்க ஓரிடத்தை நாங்கள் அடைந்தோம்.

"அங்குள்ளவர்களிடம் நான் கேட்ட கேள்வி: "உங்கள் நகரத்தை எப்படி விவரிப்பீர்கள்?" பதிலுக்கு அவர்கள், "ரீடிங்.." என்று ஆரம்பித்துத் தமது பழங்கால நினைவுகளில் மூழ்கி விட்டார்கள். இது என் மனதை மிகவும் உடைத்து விட்டது. இந்த இடம் இன்றைய, ஏன் நாளைய வெளியுலகத்தைக் கூடப் புரிந்துகொள்ள முடியாத வண்ணம் ஆக்கப்பட்டிருக்கிறதென்று உணர்ந்தேன்.

"ஒன்றரை வருடம் நான் அங்கிருந்தேன். அங்கு நான் சந்தித்தவர்கள் உருக்குத் தொழிற்சாலையில் பணிபுரிந்தவர்கள். அவர்கள்தான் ஸ்வெட்டை உருவாக்கியவர்கள். நடுத்தர வயது வெள்ளையர்களான அவர்களின் பரிதாபமான கதைகள் என்னை மிகவும் பாதித்துவிட்டன. என்னுடைய கதை நடக்கும் இடம் ஒரு மதுபானக் கடையில். அங்கு உருக்குத் தொழிற்சாலைகளில் வேலை பார்த்த தொழிலாளர்கள் வருவார்கள். அவர்களுடன் நிகழ்த்திய உரையாடல்கள் மூலம் ஷிப்டுகளில் வேலை பார்ப்பவர்களின் மனித உறவு வெளிப்பாடும் அவர்களுடைய சீற்றங்கள், எதிர்பார்ப்புகள், ஏழ்மை அவர்களை விரட்டி அடிக்கும்கொடுமை ஆகியவை பற்றிக்கேட்டறிந்தேன். அவர்களைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு பேசிய தினங்களில் - போராட்டம், கலைக்கப்பட்ட கனவுகள், அரசின் மீதான விரக்தி, சமூகத்தை வெறுப்புடன் பார்த்த பார்வை - ஆகியவற்றைத் துல்லியமாக உணர்ந்தேன். தொழிலாளர்களைத் தவிர, வீடற்ற மனிதர்கள், ஷிப்டுகளில் வேலை பார்த்தவர்கள், காவல் உயரதிகாரி, நகர மேயர் என்று எல்லோரும் அவரவர் கதைகளைச் சொல்லிவிட ஆர்வம் மிக்கவர்களாக இருந்தார்கள். இதற்கு காரணம் அவர்களைப் பற்றி வெளியுலகத்துக்கு ஒன்றும் தெரியவில்லையே என்ற ஏக்கமும் வஞ்சிக்கப்பட்டு



‘ஸ்வெட்’

விட்டோம் என்ற வெறுப்பும்தான். அவர்களுடன் பேச ஆரம்பிக்கும் முன்பே நான் நாடக ஆசிரியர் என்று என்னை அறிமுகப்படுத்திக் கொண்டுதான் பேசினேன். நாளாக ஆக அவர்கள் என்னையும் அவர்களில் ஒருத்தியாக நினைத்து மனம்விட்டுப் பேச ஆரம்பித்தார்கள்.

“ஆனால், என் ஆய்வும் என் எழுத்தும் ஒன்றுக்கொன்று சம்பந்தம் கொண்டவையல்ல என்று நான் எனக்குள் ஒரு கட்டுப்பாட்டை விதித்துக் கொண்டேன். இரண்டரையாண்டு ஆய்வறிக்கையைத் தூக்கி எறிந்துவிட்டேன். அதன் பின் என் நாடகத்தை எழுத ஆரம்பித்தேன். அதன் வரிகள், வார்த்தைகள் என்னுடையவை. எனக்கு மட்டுமே சொந்தமானவை. நேர்காணல்களைப் பிரதி எடுக்க நாடக ஆசிரியன் எதற்கு?”

‘ஸ்வெட்’ நாடகம் 2016இல் நியூயார்க் பப்ளிக் தியேட்டரில் அரங்கேறியது. அதற்குச் சில நாள்கள் கழித்து வந்த அமெரிக்க அதிபர் தேர்தலில் டொனால்ட் டிரம்ப் வெற்றி பெற்றார். “எந்த விதமான பரிவும் தீர்ப்பளிக்கும் மனநிலையும் இல்லாது அமெரிக்காவின் மிக முக்கியமான ஒரு நாடக ஆசிரியரால் எழுதப்பட்ட நாடகம் மக்களிடையே ஏற்படுத்திய அனுதாப அலை, டிரம்பின் வெற்றிக்குக் காரணமாயிற்று” என்று ‘நியூயார்க் டைம்ஸ்’ எழுதியது!

லின்னைப் பொறுத்தவரை தன் நாடகம் உருவானதற்குக் காரணமாக இருந்தவர்கள் அதைக் கண்டு உணர வேண்டும் என்று விரும்பினார். ரீடிங்கிலும் அதைப் போன்ற ஏழ்மையான பதினேழு தொழிலகப் பேட்டைகளிலும் வசித்த மக்களுக்கு இலவசமாக ‘ஸ்வெட்’ நாடகத்தைப் போட்டுக் காட்டினார். சற்றுப் பாழடைந்த ஒரு ரயில்வே ஸ்டேஷனைத் தேர்ந்தெடுத்து பெரும் திரையை அங்கு நிறுவி, இன மத கலாச்சார வேறுபாடுகளால் பிளவுபட்டிருந்த மக்கள் காணும்படி நாடகத்தைப் போட்டுக் காட்டினார். ‘ஸ்வெட்’ நாடகத்தைப் பார்த்த பலர் இம்மாதிரி சீரழிந்த இடங்களில் வாழும் மக்களைப் பற்றித் தெரிய வந்ததில் பொருளுதவியும் தொழில் தொடங்கும் முயற்சிகளையும் தர ஒப்புக்கொண்டு முன்வந்தனர்.

இதே முயற்சியை அவர் தனது ‘க்ளைட்ஸ்’ என்ற நாடகத்திலும் பின்பற்றினார். சிறையிலிருந்து வெளியே வரும் சில கைதிகளுக்கு ஓட்டல் நடத்தும் ஒரு பெண்மணி வேலை தருகிறாள். இது அவர்களின் வாழ்க்கையின் புது அத்தியாயமாக இருக்கட்டும் என்றல்ல, அவர்களை எப்போதும் பயத்தில் நடுக்கத்தில் ஆழ்த்திக் கடும் வேலைகளை வாங்கும் உத்தியாகப் பின்பற்றுகிறாள். அவள் விதிக்கும் கட்டுப்பாடுகளுக்கு அடங்கியபடியே ஒவ்வொரு மாஜி கைதியும் தனது கனவுகளின் வசீகரங்களில் ஆழ்ந்தபடி வாழ்கிறான். அவர்கள் தயார் செய்யும் சாண்ட்விச் எல்லோராலும் விரும்பப் படுகின்றன.

பிராட்வேயில் வெற்றிகரமாக ஓடிய இந்த நாடகத்தை ஒரு சிறைச்சாலையில் உள்ள கைதிகளுக்குப் போட்டுக்காட்ட லின் நிச்சயித்தார். சில மாஜி சிறைக் கைதி நடிகர்களுக்கு முன்பாக சிறையில் அப்போது தண்டனைக் காலத்தை அனுபவித்துக் கொண்டிருந்த கைதிகள் அரங்கில் உட்கார்ந்து பார்த்தார்கள். இந்தப் புதுமையைச் சாதித்த லின், “நாடகம் அதன் எல்லைகளைத் தாண்டி எல்லோருக்குமான கலையாக உருவாகித் திகழ வேண்டும் என்பதுதான் என் ஆசை. இதற்கு அர்த்தம் டிக்கட்டுகளின் விலையைக் குறைப்பது அல்ல. அது ஒன்றும் எல்லைகளை விஸ்தரிக்கும் பணியை ஆற்ற முடியாது. இம்மாதிரி மனிதர்களைத் தேடிச் சென்று அவர்களுடன் உரையாடி அவர்களில் தன்னைப் பதித்துக்கொள்ளும் செயலையே எல்லையற்ற இயங்குமுறை என்று அழைக்க முடியும்” என்றார். ●

(54ஆம் பக்கம் தொடர்ச்சி)



என்றால், மலையுச்சியில் நின்று பள்ளத்தாக்கை கண்டதும் தலைச் சுற்றினால் வந்த மயக்கமும் அல்லது நித்திரை மயக்கத்தினால் களைப்பும் ஒருங்கே என்னைத் தூக்கத்தில் வீழ்த்தி ஒரு கனவுக்குள் திரும்ப இன்னொரு கனவை காண வைத்ததா? ஒரு கனவுக்குள் இன்னொரு கனவு வந்தது இதுதான் முதல் முறை.

மீண்டும் புல் மலையிலிருந்தது மெதுவாக இறங்கிக் காரை சென்றடைந்தேன். இறங்குவது ஏறுவதை விடச் சிரமமானது. புற்களில் கால் சறுக்குவதைத் தவிர்ப்பதற்காக ஆங்காங்கே கிடந்த கற்களில் காலை வைத்து இறங்கினேன்.

வீட்டுக்குத் திரும்புவதற்காக காரைச் செலுத்தும்போது அந்த தெருவைக் கவனமாக தவிர்த்துக் காரை ஓட்டியபோதிலும் இரண்டு மாதங்களுக்குப் பின் அந்தத் தெருவைக் காண்பேன் என்று அப்போது தெரிந்திருக்கவில்லை.

அன்று மாலையில் ஒளிபரப்பாகிய தொலைக்காட்சி செய்தியில் அந்தத் தெருவிலுள்ள வீடு ஒன்று போலீஸ் சோதனைக்குள்ளானது காண்பிக்கப்பட்டது. அகபந்தஸ் பூத்திருந்த அந்த சாம்பல் பலகை வீட்டின் டிரைவ் வே உள்ளிட்ட தோட்டத்தையும் வீட்டையும் மறித்து சீல் வைத்திருந்தனர்.

போலீஸ் தொடர்ந்து விசாரித்து வருகின்றனர். அதைவிட எனக்கு அதிர்ச்சியூட்டும் செய்தியொன்றும் இருந்தது. மர்மமான முறையில் அந்த வீட்டின் வெவ்வேறு அறைகளில் இருந்த ஏழு ஆண்களை கண்டு பிடித்தனர் என்றும், அவர்கள் சட்ட விரோதமான போதை பொருளுக்கு அடிமையானவர்களென்றும், நோயாளிகளாகவோ அல்லது சித்தப்பிரமை கொண்டவர்களாகவோ இருக்கக் கூடும் என்று போலீஸ் நம்புகிறார்கள் என்ற மேலதிக தகவலுடன் அந்த செய்திக் குறிப்பு முடிந்தது. பொதுவாக விசாரணையில் இருப்பவர்களை அடையாளம் காட்டுவதில்லையாதலால் எவரது முகங்களும் தொலைக்காட்சியில் வரவில்லை.

ஆனால், அந்த இரண்டாம் கனவு நிச்சயமாக என்னை எச்சரித்திருந்ததை மட்டும் நான் உறுதியாக நம்பினேன். •

**கன்பரா யோகன்**
<solomonyoganantham@gmail.com>

டி.ஆர். நடராஜன்


# காலம் மாறினாலும், என்றும் மாறா கொள்கைகள்.

## வாழ்வின் ஒவ்வொரு தருணத்திலும் இருப்போம் உங்களுடன்.



ஸ்ரீராம் சிட்ஸ். 1974 முதல் நான்காவது தலைமுறையாக மக்களின் பொருளாதார தேவைகளைப் பூர்த்திசெய்து அவர்களின் நம்பிக்கையை பெற்ற நிதி நிறுவனமாக விளங்கி வருகிறது.

காலம் வேகமாக மாறினாலும், வணிக கொள்கைகள், எளிய நடைமுறைகளில் நாங்கள் கொண்ட நம்பிக்கையில் எந்த மாற்றமும் இல்லை. இங்கு மக்களுக்கே முதலிடம்.

**பொருளாதார சக்கரத்தின் அச்சாணி.**

எளிய மக்களே நம் நாட்டில் பெரும்பான்மை யானவர்கள். அவர்கள்தான் பொருளாதார சக்கரத்தின் அச்சாணி. அவர்களை உள்ளடக்கியதே உண்மையான பொருளாதார வளர்ச்சி.

எளிய மக்களே ஸ்ரீராம் நிறுவனங்களின் நேரடி பயனாளர்கள். ஆகவேதான் அவர்களுக்கு பயனளிக்கக்கூடிய சேவைகளையே விருப்ப வணிகமாக தேர்ந்தெடுத்துள்ளன ஸ்ரீராம் நிறுவனங்கள். சீட்டுத் திட்டங்கள், நுகர்வோர் கடன், தனிநபர் கடன், காப்பீட்டுத் திட்டங்கள் என மக்களின் அனைத்து பொருளாதார தேவைகளுக்கும் இங்கு தீர்வு அளிக்கப்படுகின்றன.

**எளிய மக்களின் மீது நாங்கள் கொண்ட அக்கறை.**

இந்தியா மிகப்பெரிய தொழில் முனைவோர் திறன் கொண்ட நாடு. நீங்கள் தினந்தோறும் சந்திக்கும் சிறு மற்றும் நடுத்தர தொழில் முனைவோர்களான பால், காய்கறி வியாபாரிகள் முதல் பிரிண்டிங், வெல்டிங் மற்றும் இன்ஜினியரிங் தொழிலாளிகள் என அனைத்து தரப்பினரின் திறமைகளையும் ஊக்குவித்து, அவர்களின் வருவாய் தொடர்ந்து அதிகரிக்கவும், வாழ்க்கைத் தரம் உயரவும் தேவையான பொருளாதார வாய்ப்புகளை உருவாக்கி தருகின்றன ஸ்ரீராம் நிறுவனங்கள். அதன் மூலம் பொருளாதார வளர்ச்சியில் மக்களும், மக்களுடன் சேர்ந்து நாங்களும் வளர்கிறோம்.

**வாழ்வின் ஒவ்வொரு தருணத்திலும் உங்களுடன்.**

ஸ்ரீராம் நிறுவனங்கள் சீட்டு சந்தாதாரர்கள், சிறு மற்றும் நடுத்தர தொழில் புரிவோர் என இதுவரை ₹ 60,000 கோடிக்கு மேல் பணம் பட்டுவாடா செய்துள்ளன. 700 கிளைகள், 12,000 பணியாளர்கள் மற்றும் 80,000 முகவர்கள் மூலம் 200 இலட்சம் குடும்பங்களின் வளமான வாழ்வுக்கு வழிகாட்டியுள்ளன.

விஜயதசமியை முன்னிட்டு, ஸ்ரீராம் சிட்ஸ் கிளைகளில் நடைபெறும் நவராத்திரி சீட்டுவிழாவில் குடும்பத்தினரோடு பங்கு பெறுங்கள். சேமிப்பு எவ்வளவு சிறியதானாலும், கனவு எவ்வளவு பெரியதானாலும், வாழ்வு வளம்பெற சரியான தீர்வு வழங்கப்படும். உங்கள் வாழ்வும், குடும்பத்தின் எதிர்காலமும் வளம்பெறுவதை கண்கூடாக காணுங்கள்.

மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள்.

**உங்கள் ஒவ்வொரு முயற்சிக்குப் பின்னாலும் நாங்கள் இருக்கிறோம்.**

ஸ்ரீராம் சிட்ஸ்

மக்களின் வளமான வாழ்வுக்கு வழிகாட்டி

**ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு பிரைவேட் லிமிடெட்**

கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 600 006, போன்: 4223 6000 • www.shriramchits.com

WORDCRAFT

# ARISE STEEL

## உயர்ந்த தரம் உறுதியான கம்பி

**SUPER STRONG+**
**TMT FE 550D**

- MS SQUARE
- MS ROUND
- MS ANGLE
- MS CHANNEL
- MS FLAT
- MS BEAM

NOW AVAILABLE ACROSS
**TAMIL NADU & KERALA**

IS 2830 ISI CML NO. 4568175
IS 1786 ISI CML NO. 3469774
IS 2062 ISI CML NO. 3469875
IS 15911 ISI CML NO. 6700068111

TÜV AUSTRIA CERTIFIED

GST NO : 33AACCT6738K1Z2

For Sales & Dealership Enquires :

**Ph : 90038 25736, 04326 - 279654**

# திருவாசக நினைவுகள்

சந்தியா நடராஜன்

**கிறித்தவ மதம் எப்படி ஒரு மத போதகரான போப்பை திருவாசகத்தை மொழிபெயர்க்க அனுமதித்தது என்பதே வியப்புதான். வரலாற்றில் சமய நூல்களின் மொழிபெயர்ப்பு என்பதே ஒரு ஆபத்தான காரியமாக இருந்து வந்துள்ளது. பைபிள் இலத்தீனிலிருந்து ஆங்கிலத்துக்கு மொழிபெயர்க்கப்பட்ட வரலாறு அதற்குச் சாட்சியாக நிற்கிறது.**

என் மகன் படித்த கல்லூரியின் பட்டமளிப்பு விழாவில் கலந்துகொள்ள நான் இங்கிலாந்து சென்றிருந்தேன். அங்கிருந்த பதினைந்து நாட்களில் சில இடங்களுக்குச் செல்ல வேண்டுமென்பது என் கனவாக இருந்தது. அதில் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகமும் ஒன்று.

நான் மாயவரத்தில் ஒரு சாதாரண அ.வ.அ கல்லூரியில் படித்தவன். 45 நாட்கள் மட்டும் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் படித்திருக்கிறேன் (அக்கல்லூரியின் சூழல் தாங்காமல் ஊருக்குத் திரும்பிவிட்டேன்). அதனால் புகழ்பெற்ற ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக வளாகத்தைச் சென்று பார்க்க வேண்டுமென்ற ஆசை இருந்தது. சென்றபோது இந்திய வம்சாவளியைச் சேர்ந்த மருத்துவ மாணவர் ஒருவர் வழிகாட்டியாக இருந்து எல்லா இடங்களையும் அழகாக விளக்கினார். அவர் பயோ மெடிக்கல் படிக்கும் மாணவர். அவருடைய தந்தை குஜராத்தைச் சேர்ந்தவர். அவர் பிராட் ஸ்ட்ரீட்டில் இருந்த பேலியோ கல்லூரிக்கு என்னை அழைத்துச்சென்றார். அப்போது எனக்கு ஒரு நினைவு வந்தது. அந்தப் பேலியோ கல்லூரியுடன் தொடர்புள்ள நபர்தான் ஜி.யு. போப்.



1939ஆம் ஆண்டு தமிழ்நாட்டுக்குப் போப் ஒரு கிறித்துவ மத போதகராக வந்தார். அவர் முதலில் திருக்குறளை மொழிபெயர்த்தார். திருவாசகத்தையும் அவரேதான் மொழிபெயர்த்தார். இங்கிருந்து இங்கிலாந்துக்குத் திரும்பிய பிறகு அந்தக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றினார். திருவாசகத்தை மொழிபெயர்க்கும் எண்ணம் போப்பின் மனதில் தோன்றிய இடம் பேலியோ கல்லூரி வளாகம். திருவாசகத்தை ஆங்கிலத்தில் தான் மொழிபெயர்க்கத் தொடங்கியது எப்படி என்று தனது ஆங்கில மொழிபெயர்ப்பின் முன்னுரையில் உணர்ச்சிப்பூர்வமாகப் பதிவு செய்திருக்கிறார் போப்:

> ஒரு நாள் நானும் பேலியோ கல்லூரியின் முதல்வர் பெஞ்சமின் ஜோவெட்டும் கல்லூரி வளாகத்தில் நடந்து வந்து கொண்டிருந்தோம். நல்ல இரவு நேரம். அவரது கனிவான முகத்திலும் வெண்ணிற தலைமுடியிலும் நிலா தனது ஒளியைப் பரப்பி ஒளிரச் செய்திருந்தது. ஜோவெட் என் தோள் மீது கைபோட்டபடிப் பேசிக் கொண்டு வந்தார். அவர் தமிழ்நாட்டுக் கவிதை, கதைகள், தத்துவங்கள் குறித்துக் கேட்டார். அப்போது நான் அவற்றின் சிறப்பை அவருக்கு விரிவாக எடுத்துவிளக்கினேன். அதைக்கேட்ட ஜோவெட், "நீங்கள் ஏன் இதை ஆங்கிலத்தில் வெளியிடக் கூடாது? என்று என்னிடம் ஒரு கேள்வியை முன் வைத்தார். எனக்கு இப்போது வயது 73. எனக்கொன்றும் உயிருக்கு உத்தரவாதம் இல்லையே! இந்த வயதில் இந்தப் பெரும் பணியை ஏற்க இயலுமா?" என்று நான் கேட்டேன். அதற்கு "To have a great work in progress is the way to live long. You will live till you finish" என்று பதிலளித்தார் ஜோவெட் .

நீ நெடுநாள் வாழ்வதற்கு உரிய வழி ஒரு மாபெரும் பணியில் தொடர்ந்து

ஈடுபட்டிருப்பதுதான். அப்பணியை நிறைவு செய்யும் வரையில் நீ உயிரோடு இருப்பாய் என்ற ஜோவெட்டின் சொற்களால் ஈர்க்கப்பட்டு அல்லது இயக்கப்பட்டு போப் தனது 73ஆவது வயதில் திருவாசகத்தை மொழிபெயர்க்க ஆரம்பித்து 80ஆவது வயதில் நிறைவு செய்தார்.

அப்போது 'இதைச் செய்' என்று சொன்ன ஜோவெட் இறந்துவிட்டார். அதனால் திருவாசகத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பை பெஞ்சமின் ஜோவெட்டுக்கு அர்ப்பணிப்பதாக மிக உருக்கமாகத் தன்னுடைய முன்னுரையில் குறிப்பிடுகிறார் போப்.

நான் சென்னை வந்த பின்பு ஜி.யு.போப் எழுதிய திருவாசகத்தைத் திரும்பவும் படிக்க ஆரம்பித்தேன். திருவாசக அறிஞர்கள், திருவாசகத்தைத் துய்த்தவர்கள் சிலர் என இவரது மொழிபெயர்ப்பில் குறை காண்பவர்களும் உண்டு.

திருவாசகத்தில் 658 பாடல்கள், 51 பதிகங்கள் உள்ளன. முதலில் சிவபுராணம். இறுதியில் அச்சோப் பதிகம்.

அச்சோப்பதிகத்தின் முதல் பாடல் இது.

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனைஆண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

இந்தப் பாடலுக்கான ஜி.யு.போப்பின் மொழிபெயர்ப்பை நான் படித்துப் பார்த்தேன். 'மோட்சத்திற்கான வழியென்ன என்று தெரியாமல் மூடனாக இருந்த என்னை இதுதான் உன்னுடைய பாதை என்று காண்பித்து பக்தி வழியில் செலுத்தி, என்னுடைய பந்த பாசங்களை எல்லாம் அழித்து எனக்கு முக்தியளித்த சிவனே!' என்பது இப்பாடலின் சாரம்.

இதில் முக்தி நெறி, பக்தி நெறி என்று இரண்டு சொற்கள் வருகின்றன. முக்தி என்ற சொல்லுக்கு மொழிபெயர்ப்பாளர்கள் 'எமன்ஸிபேசன்' (Emancipation), 'லிபரேஷன்' (Liberation) எனும் சொற்களைப் பயன்படுத்துவார்கள். ஆனால், போப், 'வே ஆஃப் எடேர்னல் பீஸ்' (Way of Eternal Peace) என்று இதனை விவரிக்கிறார். 'எடேர்னல் பீஸ்' சரியான மொழிபெயர்ப்பா? லிபரேஷன் என்பதே சரியான மொழிபெயர்ப்பு. அதுவே முக்தி, மோட்சம். இவர் சொல்லும் 'எடேர்னல் பீஸ்' எப்பொழுது கிடைக்கும்? முக்தி கிடைத்த பிறகு. அந்த முழு அமைதி, முக்திக்குப்பின் பிறப்பில்லாத நிலையில் ஏற்படுவது. போப் செயலைக் கூறுவதை விடச் செயலின் விளைவைக் கூறுகிறார். அதன் பயன்பாடு பற்றிச் சொல்கிறார்.

பக்தி என்பதற்கு 'பயஸ்' (Pious) என்பார்கள். ஆனால், 'பயஸ் லவ்' என்கிறார் போப். கருணை மயமான இறைவனுடன் தன்னை அர்ப்பணிக்கும் செயல் என்ற பொருளில் 'பயஸ் லவ்' என்ற சொல்லைப் போப் பயன்படுத்துகிறார். இதுவே என்னைப் போப்பிடம் நெருக்கம் கொள்ளச் செய்கிறது.

மாணிக்கவாசகர் பல இடங்களில் வடமொழிச் சொற்களைப் பயன்படுத்தி இருக்கிறார். வேதக்கருத்துக்கள் திருவாசகத்தில் பல இடங்களில் இருக்கின்றன. வேத உபநிடதக் கருத்துக்கள் சம்பந்தர் தேவாரத்திலேயே உள்ளன.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத

இது சம்பந்தர் சொல்வது. மாணிக்கவாசகரும் வேத உபநிடதக் கருத்துக்களை உள்வாங்கியிருக்கிறார் என்பதும் திருவாசகத்தில் நன்றாகவே தெரிகிறது.

'ரிக், யஜுர், சாம, அதர்வண என்கிற நான்கு வேதங்கள் வேறு. தேவார திருவாசகங்களில் குறிப்பிடப்படும் நான்மறைகள் வேறு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பவை' என்றும் தமிழகத்தில் விவாதிக்கப்படுகிறது. அதாவது வடமொழியில் உள்ள வேதங்களுக்கும் தமிழ்த் திருமுறைகளில் குறிப்பிடப்படும் நான்மறை என்ற சொல்லாடலுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பது ஒரு சாராரின் முடிவு.

திருவாசகத்தின் முதல் பதிகமான சிவபுராணத்தில் உள்ள வரிகள் இவை:

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள் (====)

புல், பூண்டு, புழு, மரம், விலங்கு, பறவை, மனிதன் என்று வரிசைப்படுத்திப் பிறவிகள் கடந்து வந்ததைச் சொல்லிவிட்டு, 'தாவரசங்கமத்துள்' என்கிறார். தாவர சங்கமம் என்பது தாவரக் கூட்டமில்லை. அசையும் அசையாப் பொருள்கள். புல், பூண்டு என்று மனிதர், தேவர் வரை வகைப்படுத்திவிட்டு அனைத்தையும் சேர்த்துத் தாவர சங்கமம் என்று சொல்கிறார். நாம் பத்திரப் பதிவில் தாவர ஜங்கமச் சொத்துக்கள் என்று அசையும் அசையா சொத்துக்களை (Mobile & Immobile) எழுதுகிறோம். அதே சொல்லைத்தான் மாணிக்கவாசகர் பயன்படுத்துகிறார். இது ஒரு வடமொழிச் சொல்.

சமஸ்கிருதம் தெரிந்த ஒரு பேராசிரியரிடம் இந்தச்சொல் குறித்து விளக்கம் கேட்டேன். இந்தப் பொருள் மட்டும் இல்லை. உயிரியக்கமுள்ள, உயிரியக்கமற்ற (Animate & Inanimate) என்ற வேறு பொருளும் இருக்கிறது என்று அவர் சொன்னார். இதையேதான் போப், 'அனிமேட் அண்ட் இன்அனிமேட் திங்ஸ்' (Animate and Inanimate Things) என்று மொழிபெயர்த்திருக்கிறார். போப், 658 பாடல்களே உள்ள திருவாசகத்தை ஒரு நாளைக்கு ஒரு பாடல் என்று மொழிபெயர்த்திருந்தால்கூட இரண்டு ஆண்டுகளில் முடித்திருக்கலாம். ஆனால், ஏழு ஆண்டுகள் எதற்காகக் காலம் தாழ்த்தினார்? ஏழு வருடங்கள் போப் மொழிபெயர்க்க எடுத்துக்கொண்டதற்குக் காரணம் இத்தனை நுணுக்கங்களையும் ஆழ்ந்து அறிந்து



மாணிக்கவாசகர்

செயல்பட்டதே. மேலும், போப்பின் மொழிநடை பழைய ஷேக்ஸ்பியர் நடை போலப் படிப்பதற்குச் சிரமமானதும்கூட.

கிறித்தவ மதம் எப்படி ஒரு மத போதகரான போப்பை திருவாசகத்தை மொழிபெயர்க்க அனுமதித்தது என்பதே வியப்புதான். வரலாற்றில் சமய நூல்களின் மொழிபெயர்ப்பு என்பதே ஒரு ஆபத்தான காரியமாக இருந்து வந்துள்ளது. பைபிள் இலத்தீனிலிருந்து ஆங்கிலத்துக்கு மொழிபெயர்க்கப்பட்ட வரலாறு அதற்குச் சாட்சியாக நிற்கிறது.

வைக்ளிஃப் (John Wycliffe) என்பவர்தான் முதன்முதலில் பைபிளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கத் தொடங்கினார். அவர் இதே பேலியோ கல்லூரியில் பணியாற்றியவர். பைபிளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கக் கூடாது என்பது போப்பாண்டவரின் ஆணையாக இருந்தது. இங்கிலாந்தின் தேவாலயங்களில் இலத்தீன் மொழியே ஆதிக்கம் செலுத்தியது. இலத்தீனிலிருந்து பைபிளைப் பிற மொழிகளில் மொழிபெயர்க்கத் துணிபவர்களுக்குக் கடும் தண்டனைகள் காத்திருந்தன. ஹஸ் என்பவர் பைபிளை ஹங்கேரி மொழியில் மொழிபெயர்த்தார் என்பதற்காக எரித்துக் கொல்லப்பட்டார். ஆனால், வைக்ளிஃப் பைபிளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் பணியில் ஈடுபட்டிருந்தபோதே இறந்துவிட்டார். அதாவது, அவர் செய்த குற்றத்திற்கு உரிய தண்டனையை அனுபவிக்காமலேயே இறந்து போனார். எனவே, பிறகு வந்த அரசன் வைக்ளிஃப்பின் கல்லறையை அடையாளம்கண்டு அதைத்தோண்டி வைக்ளிஃப்பின் எலும்புகளைச் சேகரித்து அவற்றை இடித்து எரித்தான். பேலியோ கல்லூரியின் சூழ்நிலையும் இந்தச் சூழலில்தான் இருந்திருக்கும்.

இலங்கை வெளியுறவுத்துறை அமைச்சராக இருந்த கதிர்காமன் மற்றும் நாவலாசிரியரும் எழுத்தாளருமான வேட் பிரகாஷ் மேத்தா (Ved Parkash Mehta) ஆகியோர் அதே பேலியோ கல்லூரி மாணவர்கள்தான்.

ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்துக்குச் செல்லும் சாலையில் மதத்தால் ஏற்பட்ட மரணங்கள் அடையாளப்படுத்தப்பட்டுள்ளன. இங்கே கத்தோலிக்கர்கள் கொளுத்தப்பட்டார்கள், இங்கே

ப்ராட்டஸ்டண்டுகள் கொளுத்தப்பட்டார்கள் என்ற குறிப்புகள் சாலைகளில் பதிக்கப்பட்டிருப்பதைக்காண முடிகிறது. இத்தகைய ஒரு இடத்தில் பணியாற்றிக் கொண்டுதான் போப் ஆங்கிலத்தில் திருவாசகத்தை மொழிபெயர்த்திருக்கிறார். தமிழ் மக்களும் அதற்கு நன்றிக்கடன் செலுத்தியுள்ளார்கள். போப்பின் கல்லறை மீது வைக்கப்படும் நடுகல்லுக்கு (Tombstone) பச்சையப்பன் கல்லூரி செங்கல்வராயன் பிள்ளை நிதி வசூல் செய்து அனுப்பியுள்ளார். போப்பும் என்னுடைய தமிழ் மக்கள் என் நடுகல்லுக்கு நிதியை வழங்கவேண்டும் என்று விரும்பியுள்ளதாகவும் தெரிகிறது. "ஒரு தமிழ் மாணவன் தூங்குகிறான்" என்று போப்பின் கல்லறையில் எழுதி வைத்துள்ளதாக என் தமிழாசிரியர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதைப் பற்றிய உண்மை தெரியவில்லை.

இரண்டாவது முக்கியமான விஷயம் போப்புக்குத் திருவாசகத்தில் ஆர்வமும் ஈடுபாடும் ஏற்பட்டதற்குக் காரணம் என்ன என்பதே. அவர் ஜோவெட்டிடம் பேசும்போது 'திருவாசகம்' பைபிளின் பழைய ஏற்பாட்டில் வரும் சங்கீதம் (Psalms) என்ற பகுதிக்கு மிக நெருக்கமாக இருப்பதாகக் கூறியதாகத் தனது முன்னுரையில் கூறியுள்ளார். பைபிளின் சங்கீதம் என்ற பகுதியில் உள்ள பாடல்களைப் படித்துப் பார்க்கும்போது போப்பின் பார்வை நமக்குப் புரிய வருகிறது. சங்கீதம் பகுதியில் 150 பாடல்களுக்கு மேல் உள்ளன. இதில் உள்ள பாடல்களை மூன்று பிரிவுகளில் அடக்கி விடலாம்.

Prayer to Lord - Praise the Lord - கடவுளைப் போற்றுதல்

You Present a Prayer before the God - கடவுள் முன்னர் பிரார்த்தனைச் செய்தல்/ ஒரு விண்ணப்பத்தைக் கடவுள் முன் வைப்பது.

Your Prayer is Answered - Thanksgiving - பிரார்த்தனை நிறைவேறியதும் நன்றிக் கடன் செலுத்தல்.

திருவாசகத்தில்

"அருள்நிதி தர வரும் ஆனந்த மலையே" (திருப்பள்ளியெழுச்சி - 2)

"ஆறாத இன்பம் அருளுமலை போற்றி"(சிவபுராணம்)

"குன்றே அனையாய்"(குழைத்த பத்து - 7)

"ஆடகச் சீர்மணிக் குன்றே"(திருச்சதகம் – 11)

"தீதிலா நன்மை திருவருட் குன்றே" (கோயில் திருப்பதிகம் -9)

இவ்வாறு குன்று, மலை என்றே திரும்பத் திரும்ப மாணிக்கவாசகர் சிவபெருமானை விளிக்கிறார். பைபிளின் சங்கீதத்தில் வரும் வரிகளும், "you are my refuge" (நீரே என் புகலிடம்), "you are my fortress" (நீரே என் அரண்) என ஒன்றுபோல இருக்கின்றன.

"வாருங்கள்; ஆண்டவரைப் புகழ்ந்து பாடுங்கள்;" "நமது மீட்பின் பாறையைப் போற்றி ஆர்ப்பரியுங்கள்." - இவை பரிசுத்த வேதாகம வாசகங்கள்.

சங்கீதத்தின் 91ஆவது பாடல் மிக நெகிழ்ச்சியாக இருக்கிறது. I will say of the Lord, He is my refuge and my fortress, My God; in him will I trust. (நீரே என் புகலிடம்; என் அரண்; நான் நம்பியிருக்கும் இறைவன்.)

தமிழ் பைபிளில் இந்த வாசகங்களுக்கான வரிகள்:

நீரே என் அடைக்கலம், என் கோட்டை, என் தேவன். நான் நம்பியிருக்கிறவர் என்று சொல்லுவேன்.

இதே பகுதியில் உள்ள இன்னொரு வசனம்..

Under his wings you will find refuge; His faithfulness is a shield and rampart.

அவர் தம் சிறகுகளால் உம்மை அரவணைப்பார்; அவர்தம் இறக்கைகளின் கீழ் நீர் புகலிடம் காண்பீர்; அவரது உண்மையே கேடயமும் கவசமும் ஆகும். (சங்கீதம் 91:4)

அங்கு ஆறாத மலை, அருள் மலை, ஆடகச் சீர் மணிக்குன்று இங்கு ஏறக்குறைய அப்படியே உள்ளது. அடைக்கலப்பத்து என்ற பெயரில் பத்து பாடல்கள் கொண்ட ஒரு பதிகமே திருவாசகத்தில் இடம்பெற்றுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது.

You will not fear the terror of the night, nor the arrow that flies by day (இரவின் திகிலுக்கும் பகலில் பாய்ந்து வரும் அம்புக்கும் நீர் அஞ்சமாட்டீர்) - இது சங்கீதத்தின் வரி (91:5)

இதற்கு இணையான வரிகளைத் திருவாசகத்தின் அச்சப்பத்தில் நம்மால் கண்டுகொள்ள முடிகிறது.

'புற்றில் வாள் அரவும் அஞ்சேன்; பொய்யர் தம் மெய்யும் அஞ்சேன்;'

"வெருவரேன், வேட்கை வந்தால்; வினைக் கடல் கொளினும், அஞ்சேன்;

"கிளி அனார் கிளவி அஞ்சேன்; அவர் கிறி முறுவல் அஞ்சேன்"

"மஞ்சு உலாம் உருமும் அஞ்சேன்; மன்னரோடு உறவும் அஞ்சேன்"

"வன்புலால் வேலும் அஞ்சேன்; வலக்கையார் கடைக்கண் அஞ்சேன்" - (அச்சப் பத்து)

என்று பாடுகிறார் மாணிக்கவாசகர்.

திருவாசகத்தின் ஆரம்பத்தில் இருந்து நாயேன், நாயினும் கடையேன் என்று சொல்லும் மாணிக்கவாசகர் இறுதி நெருங்க நெருங்க "சிக்கெனப் பிடித்தேன்" என்று இறைவனை இறுகப் பற்றிக் கொண்டதாகச் சொல்கிறார். பிறகு எதற்கும் அஞ்சாத மாணிக்கவாசகரை அச்சப்பத்தில் காண முடிகிறது.

இன்னொரு விஷயம், போப் தமிழகத்தில் கால் வைக்கும்போது வடலூர் வள்ளலாருக்கு 16 வயது. மாணிக்கவாசகரின் பாடல்களால் வசீகரிக்கப்பட்டுத் திருவாசகத்தைக் கொண்டாடி மகிழ்ந்தவர் வள்ளலார். போப் ஊரைவிட்டுப் போவதற்குமுன் வள்ளலார் இறந்துவிடுகிறார். போப் 1839இல் தூத்துக்குடியில் உள்ள சவேரியார்புரத்தில் இருந்தார். 1881 வரை போப் தமிழ்நாட்டில்



ஜி.யு. போப்

*இருந்தார். (மொத்தம் 42 ஆண்டுகள் தமிழகத்தில் இருந்துள்ளார்.) வடலூரரிலிருந்த வள்ளலாரின் ஆறு திருமுறைகளில் நான்கு திருமுறைகள் 1867 வாக்கில் வெளிவந்துவிட்டன.*

*வள்ளலாரின் மொழி மாணிக்கவாசகரின் மொழி. வள்ளலார் மாணிக்கவாசகரை அப்படியே பின்பற்றுகிறார். மாணிக்கவாசகரிடம் பேரன்பு கொண்டவராக இருந்திருக்கிறார். வள்ளலாருக்கும் மாணிக்கவாசகருக்கும் இடையே ஒரு வேறுபாடு உண்டு. அது வள்ளலாரிடம் இருந்த சமூக உணர்வுச் செயல்பாடு. மாணிக்கவாசகரோ பக்தியில் மட்டுமே திளைத்திருக்கிறார். ஆனால், இருவரின் மொழி நடையும் ஒன்றுபோலவே உள்ளது.*

“வான்கலந்த மாணிக்கவாசக! நின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால், நற்கருப்பஞ்சற்றினிலே
தேன்கலந்து, பால்கலந்து, செழுங்கனித் தீஞ்சுவை கலந்து, என்
ஊன்கலந்து, உயிர்கலந்து, உவட்டாமல் இனிப்பதுவே!”

*இப்படி வள்ளலார் மாணிக்கவாசகருக்கு 20 பாடல்கள் பாடியிருக்கிறார். வள்ளலார் மாணிக்கவாசகரை அப்படியே உள்வாங்கிக்கொள்கிறார்.*

உரியேன் அல்லேன் உனக் கடிமை உன்னைப் பிரிந்திங் கொருபொழுதும்
தரியேன், நாயேன் இன்னதென்று அறியேன் சங்கரா கருணையினாற்
பெரியோன் ஒருவன் கண்டுகொள் என்றுன் பெய்கழல் அடிகாட்டிப்
பிரியேன் என்றென் றருளிய அருளும் பொய்யோ எங்கள் பெருமானே

*என்று எண்ணப் பதிகத்தில் பாடுகிறார் மாணிக்க வாசகர். இதையே வள்ளலார்..*

உன்னைமறந் திடுவேனோ மறப்பறியேன் மறந்தால்
உயிர்விடுவேன் கணந்தரியேன் உன்ஆணை இதுநீ
என்னைமறந் திடுவாயோ மறந்திடுவாய் எனில்யான்
என்னசெய்வேன் எங்குறுவேன் எவர்க்குரைப்பேன் எந்தாய்
அன்னையினும் தயவுடையாய் நீமறந்தாய் எனினும்
அகிலம்எலாம் அளித்திடும்நின் அருள்மறவா தென்றே
இன்னுமிகக் களித்திங்கே இருக்கின்றேன் மறவேல்

இதுதருணம் அருட்சோதி எனக்குவிரைந் தருளே.

- ஆறாம் திருமுறை (பிரியேன் என்றல்)

மாணிக்க வாசகரை அப்படியே எழுதுகிறார் வள்ளலார்.

இதுபோல நூறு பாடல்களுக்கு மேல் திரைப்படங்களில் வந்துவிட்டன. கவிதை எழுதுபவர்களுக்கு பக்தி இலக்கியம் எப்படியெல்லாம் பயன்படுகிறது? அரசியல் தலைவர்களுக்கும் பேனர்கள் போஸ்டர்கள் வைப்பவர்களுக்குத் 'திருவாசகம்' நிரம்பவே பயன்படும். சிவனை மாணிக்கவாசகர், "முத்தனே! முதல்வா!" என்கிறார். அண்ணா, "அண்ணலே" என்று அழைக்கிறார். காந்தியடிகளுக்கு முன்னால் சிவனை 'அண்ணலே' என்று அழைத்துவிட்டார். அரசே, உடலே, உயிரே, அத்தனை, அமலா, ஆதியே, இன்பனே, புனிதா, புனைவே, ஆருயிரே என்று போய்க்கொண்டே இருக்கிறது. இதையே ஒரு தனி நூலகப் போடலாம்.

'அண்ணா' என்று குரல் கொடுத்த முதல் தமிழன் மாணிக்கவாசகர்தான். 'அண்ணாமலை எம் அண்ணா போற்றி'

மாணிக்கவாசகரின் புகழ்பாடும் வள்ளலாரின் இன்னொரு பாடல் இது.

வாட்டமிலா மாணிக்க வாசக நின் வாசகத்தை
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவை சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறும் என்னிலிங்கு நானடைதல் வியப்பன்றே!

பறவைகளும் விலங்குகளுமே மாணிக்கவாசகரின் பாடல் கேட்டு மெய்யறிவு அடையும்போது தான் ஞானம் பெறுவதில் வியப்பில்லை என்கிறார் வள்ளலார். மீண்டும் மீண்டும் தன்னைச் சிறுமை செய்துகொள்ளும் மனோபாவம் மாணிக்கவாசகரிடம் இருப்பது போலவே வள்ளலாரிடமும் காண முடிகிறது. மேலும் இவர்களிடத்தில் ஒரு தொடர் மரபையும் காணலாம். அப்பர் சுவாமிகள் பாடுவது மாணிக்கவாசகரிடம் வருகிறது. "நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்" என்று அப்பர் சொல்வதைப்போலவே மாணிக்கவாசகர், "மன்னரை அஞ்சோம்" என்கிறார். இந்த மரபு வழி வழியாக நிகழவே செய்யும். ஒருவரைத் தொடர்ந்து வாசித்து வரும்போது நம்மையும் அறியாமல் அவர் பயன்படுத்திய பதங்களை நாமும் பயன்படுத்தியிருப்போம்.

அதேபோல,"நெற்றித்தரள நீர்வழிய" என்ற 'இருவர்' திரைப்படத்தின் பாடல் வரிகள் சிலப்பதிகாரத்தின் கானல் வரிப்பாடலில் காணப்படும் "வாரித்தரள நீர் வழிய" என்ற அதே வரிகளின் இன்னொரு வடிவம். அந்தச் சந்தமும் சொற்சேர்க்கையும் அப்படியே வருகிறது. இதனை இலக்கியத்தில் நாட்டம் மிகுந்த வைரமுத்துவாலேதான் எழுதமுடியும். இசை அமைப்பாளர் யார் இதில்? கவிஞர் வைரமுத்து தானோ என்று கூடச் சந்தேகம் வருகிறது. அத்தனை பொருத்தமாக இந்த வரிகள் இசையை உடையதாகச் சிலம்பில் இருந்து எடுத்தாளப்பட்டுள்ளன. அவ்வாறே மாணிக்கவாசகரின் வரிகள் வள்ளலாரை ஈர்த்துள்ளன.

ஜி.யு.போப் எந்த அளவுக்குத் திருவாசகத்தில் ஈடுபட்டு இருக்கிறார் என்பதற்கு ஒரு நிகழ்வைச் சொல்லலாம்.

மார்ரே பதிப்பகம் சிறந்த முறையில் பழைய நூல்களைப் பிழையில்லாமல் பதம் பிரித்து வெளியிடும் வழக்கம் கொண்டது. திருவாசகத்தை அவர்கள் பதம் பிரித்து வெளியிடக்கூடாது என்று சைவர்கள் எதிர்த்திருக்கிறார்கள். எதிர்ப்புகளுக்கு இடையே திருவாசகத்தை மர்ரே பதிப்பகம் வெளியிட்டது. அந்த நூலின் வெளியீட்டு விழாவில் மயிலை சுப்பராயர் போப் எழுதிய ஒரு கடிதத்தைப் பற்றிப் பேசியிருக்கிறார். அந்தக் கடிதம் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி சர்.எஸ்.சுப்ரமணியம் அவர்களுக்கு போப் எழுதியது.

போப் யாருக்குக் கடிதம் எழுதினாலும் கடிதத்தின் மேற்பகுதியில் திருவாசகத்தின் ஒரு வரியை எழுதிவிட்டுத்தான் கடிதத்ததைத் தொடர்வார். அவ்வாறு நீதிபதிக்கு எழுதிய கடிதத்திலும் திருவாசக வரிகளை எழுதியிருக்கிறார். அந்த வரிகள் அவரைக் கண்ணீர் மல்கச் செய்திருக்கின்றன. அவரின் கண்ணீர்த் துளிகள் திருவாசக வரிகளின்மேல் விழுந்துள்ளன. அதனை ஒற்றுத்தாளால் ஒற்றியெடுத்திருக்கிறார் போப். அதனால் கடிதத்தில் மையின் கரை படிந்திருக்கிறது. கடிதத்தில் நீதிபதிக்கு மன்னிப்பு கேட்டுக் கொண்டு கடிதத்தை தொடர்ந்து எழுதியிருக்கிறார். "இக்கடிதத்தைப் புறக்கணிக்க மனம் வரவில்லை. திருவாசகத்தில் எழுந்த கண்ணீரும் போற்றத்தக்கது என்ற எண்ணத்தில் இக்கடிதத்தை அப்படியே அனுப்பியுள்ளேன் - மன்னிக்க" என்று எழுதியிருக்கிறார். இந்த விவரங்கள் நீ.கந்தசாமிப் பிள்ளையின் திருவாசகப் பதிப்பில் (அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு) சொல்லப்பட்டுள்ளன. இதுவே போப் திருவாசகத்தின் மீது கொண்டிருந்த காதலுக்கு ஓர் சாட்சி.

திருவாசகம் ஒரு புலம்பல் இலக்கியம் மட்டுமா? தத்துவப் பதிவு இருக்கிறதா? எப்படி வகுப்பது? வேதத்தை ஏற்கிறதா? உபநிடதக் கருத்துக்களுக்கு இடம் இருக்கிறதா? என்று பல கேள்விகள் எழுகின்றன.

பக்தி, தியானம் என்று இந்துமதத் தத்துவத்தில், இறை உணர்வை இரண்டு விதமாகப் பார்க்கலாம். 99% பக்திதான் கடைபிடிக்கப்படுவது. தியானம் கொஞ்சம் உயர்நிலை. திருவாசகத்தில் நாம் எந்த இடத்தை அடைய முடியும் என்பதைக் கேள்வியாக வைத்துப்பார்க்கலாம்.

ஓசோவின் வாக்கியம் ஒன்று இங்கு மிகப் பொருத்தமாக இருக்கும். When a drop meets the ocean, it becomes the ocean. (ஒரு துளி நீர் கடலில் விழுந்தால் அது கடலாகிறது.)

ஒரு துளி நீர் கடலில் கரைவதுபோல 'திருவாசகம்' இருக்கிறது. மாணிக்கவாசகரின்



வள்ளலார்

திருவாசகத்தைப் படிக்கும்போது அது நம்மைக் கடவுளிடம் சேர்ந்துவிடுகிறது. மனிதன், கடவுளை நினைந்து நினைந்து உருகி பக்தியில் திளைப்பதே போதுமா என்றால், அது சிவ தரிசனத்துக்கான மெய்யன்பின் ஒரு படிநிலை. அப்படியானால் வெறும் பக்தியாகப் பாராயணம் பண்ணிக்கொண்டே இருக்க வேண்டுமா? என்றால், இல்லை. தியானம், யோகம் என்ற வழிகளும் உண்டு.

ஓங்காரம் என்ற சொல் இரண்டு இடங்களில் திருவாசகத்தில் வருகிறது. அதற்கு முன்பு மாண்டூக்ய உபநிடதம் சொல்வதை பார்ப்போம். மாண்டூக்ய உபநிடதம், "மனிதன், இறைவன், உலகம் மூன்றும் ஒன்றுதான் என்பதே உலகின் மிகப்பெரிய உண்மை" என்கிறது. எந்த உபநிடதமும் எந்த இறைவனையும் குறிப்பதில்லை.இறையை"அது"என்றேகுறிப்பிடுகிறது. ஆண், பெண், சிவன், விஷ்ணு என்ற பாகுபாடு எல்லாம் இல்லை. அஃறிணையில் சொல்கிறது. மிக உயர்ந்த நிலையில் வைத்திருக்கிறார்கள். எந்த மதக் கருத்துக்களும் அதில் இல்லை.

> சென்றவை, இருப்பவை, வருபவை எல்லாம் படைப்பு என்பதை குறிக்கின்றன. படைப்பாக இருப்பது ஓங்காரம். மூன்று காலங்களையும் கடந்தவராக இருப்பவர் இறைவன். அவரும் ஓங்காரம்.

மனித நிலையை நான்காகப் பிரிக்கிறது இது. விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளில் மனித மனம் மாறி மாறி சஞ்சரிப்பதைப் பற்றி இந்த உபநிடதம் விவரிக்கிறது.

அடிப்படை உண்மைகளான உலகம், மனிதன், இறைவன் ஆகிய மூன்றும் ஓங்காரமே, ஒன்றே என்பதையே மாண்டூக்ய உபநிடதம் விளக்குகிறது.

> விழிப்பு நிலை - நாம் புற உலகை நமக்குத் தெரிந்த, நாம் காண்கின்ற நமது தூல உடம்பினால் நேரிடையாக அனுபவிப்பது ஆகும். பாடல் கேட்பது, இனிப்பு உண்பது, சொற்பொழிவாற்றுவது போன்ற செயல்களைக் கூறலாம்.
>
> கனவு நிலை - இந்நிலையில் அனுபவங்கள் அனைத்தும் மனவுலகிலேயே நிகழ்கின்றன. ஆழ்மனம் விழித்திருக்கிறது. அந்த மனம் ஒரு புதிய உலகத்தை உருவாக்குகிறது. அதுவே கனவு.
>
> உறக்க நிலை - ஆசைகளோ கனவுகளோ எதுவும் இன்றி ஆழ்ந்து தூங்குகின்ற நிலை.
>
> நான்காம் நிலை - மூன்றும் இணைந்த ஓங்காரம்.

இவற்றையும் கடந்து செல்வதே அமைதி நிலை: இறை நிலை.

"ஆன்மா நான்காம் பரிமாணம். அங்கே பிரபஞ்ச உணர்வு இல்லை. அது அமைதியானது, மங்கலமானது" என்கிறது மாண்டூக்ய உபநிடதம்.

திருவாசகத்தில் இரண்டு இடங்களில் ஓங்காரத் தத்துவம் வருகிறது. "மனவாசகம் கடந்தான்", "சொற்பதம் கடந்த அப்பன்", "மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே" என்று வாக்கு, மனம் இரண்டையும் கடந்தவன் இறைவன் என்கிறது திருவாசகம். வேத வித்தகன் என்று சிவனைச் சொல்கிறார்.

> துரியமு மிறந்த சுடரே போற்றி
> தெரிவரி தாகிய தெளிவே போற்றி!

இதைத்தான் ஓஷோ அடிக்கடி 'Beyond word and mind' என்று குறிப்பிடுகிறார்.

'காசிக்காண்டம்' என்றொரு நூல் இருக்கிறது. காசியைப் பற்றிய சிறந்த நூல். டயானா ஈக் என்பவர் The City of Lights என்ற பெயரில் காசியைப் பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறார். 5000 வருடப் பழமையான காசி நகரைப் பற்றிய அருமையான நூல். அதில் காசிக்காண்டத்திலிருந்து சில வரிகளை முதல் பக்கத்தில் எடுத்தாள்கிறார். அதன் முதல் பக்கத்தில் சிவன் யார் என்று விளக்கம் தருகிறார்.

> சிவன் பிராமணன் இல்லை. ஏனென்றால் அவன் சுடுகாட்டில் நடனம் ஆடுபவன். சிவனிடம் பொருளில்லை. அருளே தருவான் அவன் வணிகனுமல்ல. எப்போதும் யோகத்தில் அமைதியில் இருப்பவன். அதனால் சத்திரியனும் இல்லை. சூத்திரனும் இல்லை. He is beyond all caste and creed.

ஆனந்த் குமாரசாமி டான்ஸ் ஆஃ ப் சிவா என்ற நூலில் "The Conception itself is a Synthesis of the life and the art" என்கிறார். 'கடவுள் செத்துவிட்டான்' என்று சொன்ன நீட்சே, "நான் கடவுளை நம்பவேண்டுமானால் அவருக்கு நடனம் ஆடத் தெரிந்திருக்க வேண்டும்" என்கிறார். நடனம் ஆடவேண்டுமானால் நடராஜன்

தவிர வேறு யார் இருக்கிறார்கள்?

ரோடின் என்ற உலகப் புகழ் பெற்ற பிரெஞ்சு சிற்பக் கலைஞன் நடராஜரை நேரில் பார்த்ததே இல்லை. அவருக்கு 1913இ-ல் சென்னை அருங்காட்சியகத்திலிருந்த நடராஜரின் வெண்கலச் சிலையின் புகைப்படம் எடுத்து அனுப்பி வைக்கப்பட்டது. நடராஜர் உருவம் அவரை ஆக்கிரமிக்கிறது. அவர் தன்னுடைய 'ரோடின் அண்ட் தி டான்ஸ் ஆஃப் சிவா' (Rodin and the Dance of Shiva) நூலில் நடராஜரைப் பற்றி இப்படி எழுதுகிறார்.

> Viewing The Full Shiva: "In the full bloom of life, the flow of life, the air, the sun, the sense of being simply overflows. This is how the art of the Far East appears to us. From a certain angle, Shiva is a slender crescent. What talent, what pride in the body!" - Rodin and the Dance of Shiva

இதைச் சொன்னது, ஆத்திகர்கள் அல்ல. ஒரு சிற்பக் கலைஞன்.

பெயரும் உருவமும் அற்ற நிலைக்கு வருவதே துரியம் என்பார்கள். அடையாளம் அழிப்பதே அனைத்து மதங்களின் முக்கிய வேலை. அதைத் 'திருவாசகம்' சரியாகச் செய்கிறது. முழுத் திருவாசகமுமே தோன்றுதலையும் மறைதலையுமே சொல்கிறது.

நான் இல்லை என்றால் அவன் தோன்றுவான். எவன் மறைந்தால் எவன் தோன்றுவான்? "நான்" மறைந்தால் "அவன்" தோன்றுவான். அதாவது இறையோடு ஒன்றுவதே சாரம். ரிக், யஜூர், சாம, அதர்வண வேத மகாவாக்கியங்கள் சொல்வதும் இதுவே.

> அஹம் ப்ரம்மாஸ்மி - நான் ப்ரம்மாயிருக்கிறேன்
> தத்வம் அசி - நீயும் அதுவாகவே இருக்கிறாய்
> அயம் ஆத்மா பிரம்ம - இந்த ஆத்மா பரம்பொருள்

இதைத்தான் மாணிக்கவாசகர் சொல்கிறார். இதையே சுருக்கமாக "நான் ஒழிந்தால், அவன் வருவான்" எனலாம். திருவாசகத்தில் திரும்பத்திரும்ப அகம் அழிக்கும் செயலைத்தான் மாணிக்கவாசகர் பாடுகிறார். 'நாயினும் கடையேன்' என்று தன்னைத் தாழ்த்திக்கொள்கிறார். 'நாய்' என்று தன்னைப் பலமுறை சொல்லிக்கொள்கிறார். ஏன் நாய் என்று சொல்ல வேண்டும்? அது நன்னெறி செல்லாது. பாதை விலகக் கூடியது. மாணிக்கவாசகர் நாய், தாய் என்ற இரண்டு கோட்பாடுகளை எடுத்தாள்கிறார். நாய் என்பது தன்னைத் தாழ்த்தி அகம் அழிப்பதற்கு.

> நாய்க்குத் தவிசளித்து நன்முடியும் சூட்டுதல்எந்
> தாய்க்குத் தனிஇயற்கை தான்

என்று சொல்கிறார். "தாயினும் சாலப் பரிந்து" என்று இறைவனைச் சொல்கிறார். அப்பன், அத்தன், அச்சன் என்று சொல்பவர், கடைசியில் அச்சோப்பதிகத்தின் கடைசிப் பாடலில் அம்மை என்று முடிக்கிறார்.

> செம்மைநலம் அறியாத
> சிதடரொடுந் திரிவேனை
> மும்மைமலம் அறுவித்து
> முதலாய முதல்வன்தான்
> நம்மையுமோர் பொருளாக்கி
> நாய்சிவிகை ஏற்றுவித்த
> அம்மையெனக் கருளியவா
> றார்பெறுவார் அச்சோவே.

தன்னை அகமழித்து இறைவனைத் தாயாக, அர்த்தநாரீசுவரராகவே சிவனைப் பார்க்கிறார் மாணிக்கவாசகர். •

**சந்தியா நடராஜன்**
<sandhyapathippagam@gmail.com>

Form IV

Statement about ownership and other particulars about newspaper 'AMRUDHA' as required to be published under section 19-D subsection (b) of the Press andRegistration of Books Act read with Rule 8 of the Registration of Newspapers (Central Rules) 1956

| | | |
|---|---|---|
| 1 | Place of publication | CHENNAI |
| 2 | Periodicity of the publication | Monthly |
| 3 | Printer's name | A.Chandran, Ayyanar Offset. 10 Subba RaoNagar, Choolaimedu, Chennai-94 |
| 4 | Publisher's name, nationality and address | G.Thilakavathi<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 5 | Editor's name, nationality and address | Dr Prabhu Thilaak<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or share holders, holding more than one percent of the total capital | G.Thilakavathi; Dr Prabhu Thilaak; Ms Shruthi Thilaak- Directors- White Lotus Books Pvt. Ltd<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |

I, G.Thilakavathi hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

Date : 11.02.2022 Signature of publisher

# கிழக்கும் மேற்கும்

நாகரத்தினம் கிருஷ்ணா

**ஔவை சொல்லாததை, காக்கைப்பாடினியார் எழுதத் தயங்கியதை இந்த நூற்றாண்டு தமிழ்ப் பெண்படைப்பாளிகள் துணிச்சலாகப் பேசுகிறார்கள், எழுதுகிறார்கள். இருந்தும், இன்றுங்கூட மாற்றங்களுக்குப் பல நேரங்களில் கதவுகள் அடைக்கப்படுகின்றன. கதவடைத்தலுக்குப் பின்னே ஒளிந்துள்ள மனமாச்சரிய குணம் நியாயமானதா?**

"உப்பரிகையின் மேல் நின்று வானத்தைப் பார்த்தாள் கோகிலாம்பாள். வானம் தொட்டுவிடும் தூரத்தில் இருப்பதாகப் பட்டது அவளுக்கு. அப்படியே கையை உயர்த்தினாள். வானம் கைக்கு வசப்படவில்லை. வானத்தை யார்தான் தொடமுடியும்? அது என்ன விரித்த ஜமுக்காளமா அல்லது பாயா, எக்கித்தொட?" - 'மானுடம் வெல்லும்' நாவல் தொடக்கம், ஆசிரியர் பிரபஞ்சன்.

"அதொரு ஞாயிறு காலை. வருடம் 1920. அமெரிக்காவின் கிழக்கு பெனிசில்வேனியாவைச் சேர்ந்த மிடில் ஹோப் பகுதி. ஜோன் ரிச்சர்ட்ஸ் எழுந்திருக்க மனமின்றி மெத்தனமாகப் படுக்கையில் கிடந்தவள், நிதானமாக இமைகளை உயர்த்தி கண்களை முழுமையாகத் திறந்திருருந்தாள். பார்வை ஜன்னலில் சுள்ளென்று காய்ந்து கொண்டிருந்த ஜூன் மாத கதிரவனிடத்தில் இருந்தது. குப்பென்று ஒரு பரவசம் உடலுக்குள் பாய்ந்தது. கல்லூரியில் இறுதியாண்டு முழுக்க இனியும் தானொரு இளம்பெண்ணல்ல என்ற எண்ணத்துடனும் ஒரு முதிர்ந்த பெண்ணுக்குரிய வாழ்க்கையை எதிர்பார்த்தும் பதற்றமுடன் காத்திருந்தவள் அவள், திரும்ப தான் பிறந்து வளர்ந்த வீட்டிற்கு, வாழ்க்கையைத் தொடர வந்திருக்கிறாள்." - இது பெர்ல். எஸ்.பக், என்ற படைப்பாளியின் 'The Time Is Noon' ('நண்பகல் நேரம்') என்கிற நாவலின் தொடக்கம் .

இரண்டு எழுத்தாளர்கள் இரு வேறு பண்புக்குச் சொந்தக்காரர்கள். இரு நிலம் சார்ந்த சமூகத்தின் பெண்களை அறிமுகபடுத்துகிறார்கள். இரு பெண்களும் நிலம், காலம், சமூகம், சமயம் ஆகியவற்றால் வேறுபாடுகளைக் கொண்டவர்கள். ஆனாலும் அடிப்படை மனித உணர்வில் வேறுபட்டவர்களல்ல. இருவருக்கும் தங்கள் வாழ்க்கை சார்ந்து சில உண்மைகளும் நம்பிக்கைகளும் இருக்கின்றன.



இரு பெண்கள் ஊடாகவும் அவர்கள் சார்ந்த சமூகங்கள் ஊடாகவும் விதிக்கப்பட்ட வாழ்க்கை முறையை சொல்வதும் விமர்சனம் செய்வதும் நூலாசிரியர்களின் நோக்கம். இலக்கியங்களின் குறிக்கோளும் இவைதான்.

இப்பிரபஞ்சத்தில் மிகவும் மர்மமான பூமி அல்லது மர்மதேசம் என்று ஒன்றிருக்குமானால், அது மனிதர் வாழ்க்கையாகத்தான் இருக்க முடியும். மனிதர் வாழ்க்கையை, மனிதரை எளிதாக புரிந்துகொள்ள முடியுமானால் இலக்கியத்திற்கான அவசியமே இல்லை; "அதுதான் தெரியுமே!" எனக் கடந்து போயிருப்போம். கலையும் இலக்கியமும், பல ஆயிரம் மைல்கள் பயணித்து பல நாடுகளுக்குச் சென்று, பல காலம் பழகியும் புரிந்துகொள்ள இயலாத மனிதர்களை, அவர்களின் பண்பை, குணாதிசயங்கள் சில மணிநேர வாசிப்பில் புரிய வைப்பது. அனைத்திற்கும் மேலாக நம்மை நாமே உரசிப் பார்த்து தெளிவுற உதவும் கட்டளைக்கல்.

எல்லா மனிதர்களும் அடிப்படை பண்பில் ஒன்றுபோல தோற்றம் தரினும் பூகோள இருத்தல், காலம், அரசியல், பொருளாதாரக் காரணங்களுக்கேற்ப, சமூகச் சூழலுக்கொப்ப சில பண்புகளைக் கொண்டிருக்கின்றனர். மனிதரையும் மனிதர் வாழ்க்கையைப் பேசுகிற இலக்கியத்திலும் இந்த ஒன்றும் பலவும் உண்டு.

நிறத்தால், சமயத்தால், இனத்தால், பிறந்த மண்ணால், எந்த பெயரில் வாழ்ந்தாலும், எந்த நாட்டில் வாழ்ந்தாலும் மனிதருக்குப் பசியுண்டு, காதலுண்டு. மனிதர்கள் அனைவரிடமும் காணக்கூடிய அடிப்படை பண்பு இது. இதுவரை பிரச்சனைகளில்லை. ஆக மனிதரின் அடிப்படைத் தேவைகளில் ஒற்றுமை இருக்கிறது. தேவை தீர்வுக்கான பொருள்களிலும், அதனைத் தேடும் வழிமுறைகளிலும் மனிதர்கள்




வேறுபடுகிறார்கள்.

இலக்கியத் தேடுதலிலும் அடிப்படைத் தேவைகளில் ஒற்றுமை இருப்பினும் அதைத் தேடுகின்ற வகையில் வேறுபாடுகள் இருக்கின்றன. இந்த வேறுபாடுகளால்தான் சொந்த மொழியில் வாசித்தது போக மொழிபெயர்ப்புகளையும் தேடி வாசிக்கிறோம். பிறமனிதர்களிடம் கைகுலுக்குகிறோம், அவர்களை புரிந்துகொள்ள முயற்சி செய்கிறோம்.

ஒருபடித்தான உருவங்கள், காட்சிகள் அலுத்துவிடும், குழப்பம் தரும். மனிதர்கள் அனைவரும் நகல் எடுத்ததுபோன்று நூறுகோடி பேரும் சின்னசாமி ஆகவோ பெரியசாமி ஆகவோ இருந்தால் என்ன நடக்கும், யோசித்து பாருங்கள். ஆக அகத்திணையில் ஒற்றுமையும் புறத்திணையில் வேற்றுமையும் இருக்கிறது. காலம், அரசியல், சமூகம், இயற்கை, தட்பவெப்ப நிலைக்கேற்ப உயிர் வாழ்க்கை அமைவது போல மனிதனையும் மனிதர் வாழ்க்கையையும் பேசும் கலை இலக்கியமும் காலம், அரசியல், சமூகம் சூழலுக்கொப்பத் தன்னை எழுதிக்கொள்கிறது.

புனைவு என்பது இட்டுகட்டுவது ஆயினும், இட்டுக் கட்டியதை உண்மையென நம்பும்படிச் செய்வது புனைவிலக்கியத்திற்கான அறம். எழுத்தின் தொனி, இலை மறை காயாக தெரிவிக்கப்படும் கருத்துக்கள், கதைசொல்லி, கதைமாந்தர்கள், கற்பனை என்ற பெயரில் முன்வைக்கப் படும் உண்மைகள் அல்லது பொய்கள் அனைத்தும் நாம் அறிந்த அல்லது அறியாத மனிதர்களை நாமாகவும் அவர்களின் வாழ்க்கையை நம்முடையதாகவும் நம்பவைக்கும் தந்திரத்தில் புனைவெழுத்தின் வெற்றி அடங்கியுள்ளது. கண்ணகியையும் கோவலனையும், ரோமியோவையும் ஜூலியட்டையும் இன்றுவரை நினைவுகூற முடிகிறதெனில், நம்பகத்தன்மையை வாசிப்புதோறும் ஏற்படுத்துவதால்தான். இந்த நம்பகத் தன்மையே புனைவிலக்கியத்தின் பிற பண்புகளை கூடுதலாக சிலாகிக்க உதவுகிறது.

சிலப்பதிகாரம் மணிமேகலை போன்றவை களெல்லாம் அந்தந்த நில மக்களின் தனித்தன்மையான பண்பாட்டைக் கூடுதலாகப் பேசின. இன்றைய புனைவிலக்கியங்களில் ஒரு பன்முக பண்பாடு கலந்திருக்கிறதென்பது வெளிப்படை.

இன்றைய புனைவுலகப் போக்கு குறிப்பாக நாவல்கள் பற்றி எனது கருத்தை பகிர்ந்துகொள்வதுதான் நோக்கம்.

கீழை நாடுகள் தொடக்கத்தில அவைகளுக்கென தனி பண்புகளைக் கொண்டே இருந்திருக்கின்றன. சீன இலக்கியம் ஆறாம் நூற்றாண்டிலும் ஜப்பானியர் இலக்கியம் 11ஆம் நூற்றாண்டிலும் தொடங்கியதாக இலக்கிய வரலாறுகள் தெரிவிக்கின்றன. நம்முடைய ஐம்பெரும் காப்பியங்களைப்போல இவை சமயம், புத்த பிட்சுகள், துறவிகள், அறம் என்று பேசின.







உரைநடை இலக்கியத்தை அவை நமக்கு முன்னதாக கண்டிருக்கின்றன எனத் தெரிய வருகிறது.

புனைவிலக்கிய அணுகுமுறைகளில் புதிய புதிய கலை நுட்பங்களை புகுத்தி வியப்பில் நம்மை ஆழ்ந்துவது மேற்குலகம் என்கிறபோதும் முதல் உரைநடைபுதினத்தைஜப்பானியர்கள்படைத்தார்கள் என்கிற தகவல் கீழைதேயத்தவர்களுக்குப் பெருமைதரும் செய்தி. நூலின் பெயர் 'கெஞ்சியின் கதை.' நூலாசிரியர் ஒரு பெண், பெயர் முராசாகி ஷிக்கிபு.

இன்றைய நவீன படைப்பில் காணக்கூடிய பல்வேறு அம்சங்களை முராசாகி ஷிக்கிபு கையாண்டிருப்பதும்,மேட்டுகுடியினர் பின்புலத்தைக் கொண்ட ஆசிரியரே பிரபுக்களின் இழிவான நடவடிக்கைகளை விமர்சிப்பதும் நாவலின் சிறப்பு. காரணம் படைக்கப்பட்ட காலம் பதினோறாம் நூற்றாண்டு

பத்தொன்பதாம் நூற்றாண்டில் 'பிரதாப முதலியார் சரித்திரம்' தொடங்கி வைத்த தமிழ் புனைவிலக்கிய போக்கு ஆரோக்கியமாகவே இருக்கிறது.

படைப்பிலக்கியத்தில் அதிகம் ஆராதிக்கபடுகிற அல்லது புதியவகை படைப்பு முறையை அதிகம் அறிமுகப்படுத்தியவர்களென நம்பப்படுகிறவர்கள் பிரெஞ்சு படைப்பிலக்கியவாதிகள். எனவே, பிரெஞ்சு இலக்கிய உலகின் தற்போதையை படைப்புகள் எதுபற்றி பேசுகின்றன என்பதைத் தெரிந்துகொள்வது, ஒருவகையில் மேற்குலக இலக்கியவெளியை புரிந்துகொள்ளும் முயற்சி.

பிரெஞ்சு, ஆங்கிலம், ஸ்பானிஷ் மொழிகள் தொன்மையில் தமிழுக்குப் பிந்தியவை. சங்கத் தமிழ் கோலோச்சிய காலத்தில், மேற்குலக மக்கள் தங்களுக்கான மொழியைச் செம்மைபடுத்தப் போராடிக் கொண்டிருந்தார்கள். எனினும், நாம் யாப்பிலக்கணத்தைக் கொண்டு கவிதைகள், நாடகங்கள், காப்பியங்களை எழுதிக்கொண்டிருக்க, மேற்குல வாசிகள் செக்குமாடுகள் வாழ்க்கையில் அலுத்து அறிவியல் தேடலுடன் தங்கள் தினசரிகளைப் புதுப்பித்துக் கொண்டது போல இலக்கியத்திலும் தேடலில் இறங்கினார்கள். பானை, சட்டியிலிருந்து குக்கருக்கும், கட்டுமரத்திலிருந்து கப்பலுக்கும் இலக்கியத்திலும் அவர்களால் தாவ முடிந்தது. மானுடவியல், பிளேயாது (Pléade), பரோக், செம்மொழிஇயல், அறிவொளிஇயக்கம், அபத்தவியல், இருத்தலியல், கட்டமைப்பு இயல், புனைவியல், புது புனைவியல், எதார்த்தம், மீ எதார்த்தம், நவீனத்துவம், பின் நவீனத்துவம், பின்காலனியத்துவம், பின்-பின் நவீனத்துவம் எனப் பல மைல்கற்களைக், கடந்து இன்று வேறு தேடலில் மேற்குலகு இறங்கியுள்ளது.

இதுபோன்ற முயற்சிகள் தமிழிலும் நிகழ்ந்திருக்கலாம், அது முளையிலேயே கிள்ளப்பட்டிருக்க அதிகம் வாய்ப்புண்டு. நம்முடைய அறிவுப்புலம் குரு - சிஷ்யர்கள் உறவு சார்ந்தது



முகம்மது புகார் சார்

இல்லையா? பாரதிக்கு முன்பாக, ஒரு பரதி சொல் புதிது பொருள் புதிது என நினைத்து, எழுதியதை தனது குருவிடம் காட்டி, அவருடைய அசீர்வாதத்தைப் பெற நினைத்திருக்கலாம். குரு என்ன சொல்லியிருப்பார் (ஒரு கற்பனைதான்) "போடா அதிகபிரசங்கி, இப்படியெல்லாம் எழுதபடாது" என எச்சரித்து அவனது ஓலை நறுக்கை அக்கினிக்குத் தானம் செய்திருக்கக்கலாம்.

ஔவை சொல்லாததை, காக்கைப் பாடினியார் எழுதத் தயங்கியதை இந்த நூற்றாண்டு தமிழ்ப் பெண்படைப்பாளிகள் துணிச்சலாகப் பேசுகிறார்கள், எழுதுகிறார்கள். இருந்தும், இன்றுங்கூட மாற்றங்களுக்குப் பல நேரங்களில் கதவுகள் அடைக்கப்படுகின்றன. கதவடைத்தலுக்குப் பின்னே ஒளிந்துள்ள மனமாச்சரிய குணம் நியாயமானதா? எந்த ஒரு படைப்பும் அனைவரையும் திருப்திபடுத்த சாத்தியமில்லை. கசப்பதும் ருசிப்பதும் அவரவர் சுவை நரம்புகள் சார்ந்த விடயம்.

இன்று பிரெஞ்சு படைப்புலகில் நடப்பதென்ன? முதலாவதாக பாலுறவை அப்பட்டமாக பேசும் படைப்புகள். இது போன்ற படைப்புகள் பிரெஞ்சு மொழிக்குப் புதிதல்ல என்கிறபோதும் இன்று அது வேறொரு பரிமாணத்தைத் தொட்டுள்ளது. மனிதர்களும் விலங்கென்ற உண்மையை உறுதிபடுத்த முனைந்ததைப்போல தகாத பாலுறவுகளை, ஓரினச் சேர்க்கையை மையப்படுத்திய, அப்பட்டமாக பேசுகிற, சில நேரங்களில் அருவருப்பும் ஊட்டுகிற வகையில் ஒருசில புனைவுகள் இருக்கின்றன. சந்தை அரசியலை அடிப்படையாகக் கொண்ட உலகில், மனித மனங்கள் காட்சி ஊடகம், சமூக ஊடகமென அடிமைப்பட்டுக் கிடக்க அவர்களை விடுவிக்கும் தந்திரமாக நெருப்போடு விளையாடுகிறார்களோ என்கிற வினாவும் அடிமனதில் எழுகிறது. வேறு சிலரோ இனவாதம் நிறபேதமென அலைகிறார்கள்.

மிஷெல் ஹூல்பெக் (Michel Houellebecq) ஆற்றல்மிக்க படைப்பாளிகளில் ஒருவர், அவருடைய மொழி ஆளுமையும், இலக்கிய திறனும் நாடறிந்தது, ஆனால், அண்மைக் காலமாக, பிரெஞ்சு மக்களின் எதிர்காலம் இசுலாமியத்தால் பாழ்பட்டுவிடும் என்பதுபோன்ற கருத்துக்களை முன்னெடுக்கும் விதமாக எழுதுகிறார்.

ரெனார் கமுய் (Renard Camus) தொடக்க காலத்தில் தீவிர இடதுசாரி, இன்று தீவிர வலதுசாரி. ஒருபாலின சேர்க்கையில் ஆர்வம் கொண்ட ஆசாமி, அருவருக்கத்தக்க தம்முடைய பாலுறவு நாட்குறிப்புகளை இலக்கியம் என்ற பெயரில் பகிர்ந்துகொள்கிறார். அண்மைக்கால வலதுசாரி கொள்கைகளுக்கு ஏற்ப அந்நியர்களால் பிரான்சு தமது அடையாளத்தை இழந்துவிட்டதென்கிற புலம்பலும் அவரிடமுண்டு.

இத்தகைய இலக்கிய சூழலில் கற்பனைவளம், மருட்சிப்புனைவு, ஆச்சரியங்கள் போன்றவற்றைத் தேடி மீண்டும் தொன்மம், தூரதேசம், எனப் பயணிக்கிற ஒன்றிரண்டுபேர் இல்லாமலில்லை. அவர்களில் ஒருவர், பிரெஞ்சு இலக்கிய உலகின் மிகப்பெரிய பரிசு எனக் கூறப்படும் 2021 கொன்கூர் பரிசை வென்ற முகம்மது புகார் சார் (Mohammed Mbougar Sarr). இவர் ஒரு ஆப்ரிக்கர், செனெகல் நாடு பூர்வீகம். •

**நாகரத்தினம் கிருஷ்ணா** <nakrish2003@yahoo.fr>

# நீல லில்லி

கன்பரா யோகன்
ஓவியம்: துரயா அல்-பகாமி

**இந்தக் ஆற்றின் பாதை ஆபத்தில்லாமலா இருக்கும்? சேற்றுக் கரையில் தண்ணீர் குடிக்க வந்த மண்ணிறப் பாம்பொன்று கண் திறந்த படி நித்திரையாயிருந்தது. பாம்புக்குஇமைகள்இல்லைஎன்றுஅறிந்திருந்தேன். ஆனால், இது பகல் நித்திரை கொள்கிறது என்று தெரிந்தது. அதை எழுப்பாமல் ஆற்றின் கரையோரமாக புற்களின் மேல் மெள்ள நடந்து கொண்டே காட்டின் நறுமணத்தை முகர்ந்தேன். சேற்றின் மணமும் காட்டுப் பூக்களின் மணமும் கொண்ட கலவையாகவிருந்து காற்று.**

மலையில் ஏறி யார் புல் வெட்டுவார்கள்? அந்த மலையை கடந்து காரில் செல்லும் எவருக்கும் இந்த கேள்வி எழாமல் போகாது. தூரத்திலிருந்து பார்க்கையில் வெகு அழுத்தமாகப் புல் வெட்டப்பட்ட ஒரு சரிவான சமதரை போலவே அந்த மலை தெரிந்தது.

அந்த புல் மலைக்குப் பின்னே ஒரு ஆழமான பள்ளத்தாக்கும் பிறகு ஒன்றுக்குப் பின் ஒன்றாக மூன்று நான்கு காடு செறிந்த பச்சை மலைகளும் அதனைத் தொடர்ந்து பின்னணியில் வேறும் பல நீல மலைகளும் கொண்ட முடிவே தெரியாத நீண்ட மலைத் தொடர் அது. விசித்திரமாக அது மட்டுமே ஒரு வெறும் புல் வெளி மலையாக இருந்தது. மற்றைய மலைகளிலெல்லாம் அடர்த்தியான பைன் மரக் காடுகள் அல்லது யூகலிப்டஸ் மரக் காடுகள் இருந்தன.

அது நடுக்கோடை கால வெயில் ஏறத் தொடங்கியிருந்த ஒரு காலை. ஒன்பது மணிக்கே எரிக்கும் வெயில் தோலை சுட்டது. இன்றும் தோலுக்குப் பூசும் சண் கிரீமைத் தடவ மறந்திருந்தேன்.



மலையின் அடிவாரத்துக்கு செல்லும் பாதையைக் கண்டுபிடிப்பதுதான் மலையில் ஏறுவதை விடச் சிரமமானது. பிரதான வீதியிலிருந்து மலை இருந்த பக்கமாக திரும்பிய ஏதோ ஒரு சாலையில் காரைத் திருப்பினேன். ஆனால், உள்தெருவில் நுழைந்து விட்டால் மலையை காணமுடியாது. அங்கு தெருவில் நிற்கும் மரங்களும் வீடுகளும் மலையை மறைத்து விடுகின்றன.

அந்தப் பாதை தோசைக் கல்லைப்போல வட்ட வடிவமாக திரும்பி செல்லக்கூடிய ஒரு கோல்டிசாக் தெருவில் முடிந்துவிட்டது ஏமாற்றத்தைத் தந்தது. காரினால் வட்டம் சுற்றித் திருப்பி நிறுத்தினேன்.

காலை வெய்யில் ஏற்கனவே எரிப்பது போல தோலை சூடேற்றிருந்தது. யாரிடமாவது கேட்டுப் பார்க்கலாம் என்று காரை விட்டு இறங்கி அருகிலிருந்த சாம்பல் நிற பலகை வீடொன்றை நோக்கிப் போனேன். வேறு வீடுகளும் அருகில் இருக்கவில்லை.

வரிசையாக அகபந்தஸ் என்றழைக்கப்படும் நீல நிற லில்லி மலர்களும் அதைவிட பலநிற டெய்சிகளும் பூத்திருந்த முன் தோட்டத்தில் ஒரு காலை மடித்தபடி குனிந்து களை பிடுங்கி கொண்டிருந்தாள் ஒருத்தி. என் பார்வையை அவள் முகம் நோக்கித் திருப்புவதற்கிடையில் அவள் முகத்தை நிமிர்த்தி என்னிடம் என்ன என்பது போல் பார்வையால் கேட்டாள். பிறகு விரைவாக எழுந்தாள். அலை ஒன்று எழுந்து அடங்குவது போல மார்புகள் ததும்பித் தணிந்தன. வெயிலில் அவள் முகம் வெண்மையும் சிவப்பும் கலந்து வியர்த்திருந்தது.

“இந்த மலையில் ஏறுவதற்கு வழி இருக்கிறதா” என்று கேட்டுக்கொண்டவாறே, அவள் வயதை ஒரு நாற்பதுக்கு குறைவாகவே இருக்கும் என்று மதிப்பிட்டேன். மென்

மஞ்சள் மெல்லிய சட்டையும் முழங்கால்களுக்கு மேல் ஏறியிருந்த சாம்பல் நிறக் காற் சட்டையும் அணிந்திருந்தாள். பொன்னிறமும் மண்ணிறமும் கலந்த தலைமுடி; அகன்ற நீல விழிகளின் மேல் மை பூசிய புருவம். குவிந்த சிறிய உதடுகளில் மினுங்கும் மென்சிவப்பு நிற சாயமிட்டிருந்தாள்.

“இல்லை. யாரும் ஏறுவதில்லை. ஒருவேளை ஏடனுக்குத் தெரிந்திருக்கலாம்” என்றாள். அவள் கண்களில் ஒரு மின்னல் தோன்றி மறைந்தது.

“ஏடனுடன் பேசலாமா?”

“அவன் வர இரண்டு மாதமாகுமே”.

‘யாரது ஏடன்’ என்று கேட்க வேண்டும் போலத் தோன்றிய கேள்வியைக் கேட்காது விட்டேன்.

நன்றி சொல்லி வீட்டுக் காரை நோக்கி நடந்தேன்.

ஒரு நாளுமில்லாதவாறு இந்த சில கணங்களின் படபடப்பு என்னை வதைத்தது. ஒருமுறை அவளை திரும்பிப் பார்த்து விட்டு காரில் ஏறுவோம் என்று எண்ணி விட்டு பிறகு வேண்டாம் என்று காரை நோக்கிப் போனேன். ஆனால், அவள் என்னை பார்த்துக் கொண்டிருந்ததை என் முதுகு சொல்லியது.

மலைக்கு செல்லும் பாதை எது? கடந்த ஐந்து நாட்களாக என்னைத் தொடர்ந்து வருகிறது ஒரு மனசோர்வு. இரவில் எனது நித்திரை குறைந்து போனது. மனச் சோர்வை முறியடிக்க எதையாவது வெற்றிகொள்ள வேண்டும்.

காரை மெதுவாகச் செலுத்தியபடி மலை நோக்கியிருந்த இன்னொரு தெருவில் திருப்பினேன். கையில் கறுத்த நாயை பிடித்தபடி ஒருவன் இடப்பக்கமாக நடை பாதையில் போய்க் கொண்டிருந்தான். பாதைக் கரையில் உள்ள புற்களை முகர்ந்து பார்ப்பதற்காக நாய் அடிக்கடி பாதை விட்டு அலைந்து செல்ல அவன் அதை மீண்டும் மீண்டும் பாதைக்கு இழுத்துக் கொண்டிருந்தான். நானோ தோட்டத்தில் நின்ற அந்தப் பெண்ணின் நினைவுகளால் இன்னும் அலைக்கழிந்து கொண்டிருந்தேன்.

இம்முறை காரிலிருந்து இறங்காமலே இடப்பக்க யன்னல் கண்ணாடியைத் திறந்து அம்மனிதனிடம் கேட்டேன்.

“மலையில் ஏறும் பாதை இல்லை ஆனால், அடிவாரத்துக்குப் போகும் வழி தெரியும்” என்றான்.

“அது போதும்” என்றேன்.

அவன் சொன்ன தெருவால் காரைத் திருப்ப அது ஒரு கிறவல் தெருவாக மாறி ஓரிடத்தில் முடிந்துவிட்டது. காரை நிறுத்தி பூட்டினேன். அங்கிருந்து எந்த பாதையும் போகவில்லை. கொஞ்ச தூரம் கிறவல் மட்டும்தான் தொடர்ந்தது. அதை பின்தொடர்ந்து நடந்தேன். மலை ஏறும் வழியைக் கண்டுபிடிப்பதற்கே ஒரு மணி நேரம் போய்விட்டது.

மலையில் ஏறத் தொடங்கியபோதுதான் வெட்டப்பட்டிருந்த புல் என்று நான் நினைத்திருந்தது இடுப்பளவு உயரத்தில் வளர்ந்திருந்த யானை புற்கள் போன்ற ஒன்று என்று தெரிந்தது. அந்தப் புற்களை நான் முன்னெப்பொழுதும் காணவில்லை. அவற்றை அவ்வப்போது பிடித்து ஏற வேண்டியிருந்தது. எந்த நிழலுமில்லாத அந்த சரிவில் அவ்வப்போது நின்று ஓய்வெடுப்பதற்கு அவற்றைப் பிடித்துக்கொண்டு நின்றேன்.

வேலைக்குப் போகவில்லை. எவருக்கும் சொல்லாமல் திடீர் லீவு எடுத்திருந்தேன். ஒரு மாதம் முன்பென்றால் இவ்வளவுக்கும் பலதடவை ஜோஷ் போன் அடித்திருப்பான். முன்னூறு பேர் கொண்ட எங்கள் கணினி மென்பொருள் கம்பெனியின் எம்டி அவன். ஒரு மாதம் முன்பு வரை என்னுடன் நட்பாகவே இருந்தான்.

அந்தக் கூட்டம்தான் எல்லாவற்றையும் தலை கீழாக்கியது. ஜோஷ் கொண்டு வந்த புதிய இணைய தரவுப் பாதை பாதுகாப்பு மென்பொருளில் பல ஓட்டைகள் இருப்பதை சொன்னேன். ஏற்கனவே ஒப்பந்தம் செய்த கொம்பனியுடன் முறித்துக்கொள்ள அவன் தயாரில்லை. நான், “இது வேண்டாம்” என்றேன்.

என்னுடன் அன்று முரண்பட்டதுதான். இதுக்கு காத்திருந்த என் எதிராளிகள் சிலர் சதி வேலைகள் செய்தனர். ஒப்பந்தம் செய்த கொம்பனியிடன் ஜோஷ் பணம் கையூட்டுப் பெற்றான் என்ற அனாமதேய கடிதம் ஒன்றை தலைமை காரியாலயத்துக்கு அனுப்பினார்கள். ஓடிட்டர்கள் மூலம் வாங்கிக் கணக்குகள் சோதனை செய்யப்பட்டன. எல்லாவற்றுக்கும் பின்னணியில் நான் இருந்தேன் என்றும் எம்.டி ஆகும் பேராசையில் அதை செய்தேன் என்றும் பொய்களை விதைத்தார்கள். ஜோஷ் என்னுடன் பேசுவதை நிறுத்தினான். நான் செல்லாக் காசாகிப் போனேன்.

வெயிலில் காய்ந்து காலின் கீழ் முறிந்த புற்கள் என் சப்பாத்தெங்கும் விதைகளை ஒட்டியிருந்தன. நிலம் சூடாகியிருந்ததால் சாதாரணமாக கோடை காலத்தில் ஊர்வன புற்றுகளை விட்டு வெளிவரும் காலம் அது. ஆச்சரியமாக அன்று அரணைகளோ கறுப்புப் பல்லிகளோ எதுவும் ஓடவில்லை. எப்படியும் ஒரு பாம்பைக் கண்டுவிடுவேன் என எண்ணியிருந்தேன் ஆனால், எதுவும் தலை காட்டவில்லை.

மலையின் உச்சிக்கு வர முக்கால் மணி நேரம் எடுத்திருந்தது. சேர்ட் மழையில் நனைந்தது போலிருந்தது. ஆனால், அடுத்த கணமே வீசிய காற்று அதை காயப் போட்டது.

பள்ளத்தாக்கைஎட்டிப் பார்த்தேன். பள்ளத்தாக்கு முழுவதும் அடர்ந்த காடு மண்டிக் கிடந்தது. நிழல் தரு மரங்கள் பல நின்றன. ஆனால், அவைகளின் உச்சியை மட்டும் மேலிருந்து பார்க்க முடிந்தது. நிலமே தெரியவில்லை. விசித்திரமாக இடையிடையே ஒரு வெண்ணிறம் பளிச்சிடுவது தெரிந்தது. அது என்ன? இந்தக் கேள்வியோடு முன்னகர்த்தபோதுதான்



பள்ளத்தாக்கின் அடியை ஒரு கணத்தில் கண்டேன். தலை சுழன்று நிலம் என் கால்களை விட்டு நழுவிச் சுழன்று கொண்டிருப்பதைப் போன்றதொரு பிரமை.

நினைவு வந்தபோது ஓடும் ஆறு பக்கத்தில் கிடந்தது. தண்ணீரில் மிதக்கிறேனா அல்லது மணலில் கிடக்கிறேனா என்று முதலில் தெரியவில்லை. பின் தலை நிலத்தில் அடிபட்டது போன்றதொரு வலி. எப்போது சறுக்கி விழுந்து முடித்தேன், எப்போது பள்ளத்தாக்கின் தரையை தொட்டேன் என்பது கூட நினைவில்லை.

மெல்ல இருள் கவியத் தொடங்கியிருந்தது. நான் இப்போது கிடக்கும் இடம் நான் ஏறிய மலைக்கு கிட்ட இல்லை என்பது தெரிந்தது. அந்த மலையையே இப்போது என்னால் அடையாளம் காண முடியவில்லை என்பது பெரும் திகிலைக் கிளப்பியது. இந்த பள்ளத்தாக்கும் நான் முதலில் மலையிலிருந்து பார்த்த பள்ளத்தாக்கு அல்ல என்பதும் புரிந்தது. அங்கங்கே வெண்ணுரை பொங்க ஓடிக்கொண்டிருந்த இந்த இந்த ஆற்றைத்தான் மேலிருந்து பார்த்திருக்கிறேன்.

அப்படியானால் நான் விழுந்த இடத்திலிருந்து இங்கே என்னை கொண்டு வந்து சேர்த்தது இந்த ஆறுதானா? அது உண்மைதான் என்பதை என் சேர்ட்டில் ஒட்டியிருந்த பாசிகள் போன்ற ஒருவகை தண்ணீர்த் தாவரங்களும் நனைந்து காய்ந்திருந்த என் உடைகளும் சப்பாத்துகளும் உறுதிப்படுத்தின.

படுத்திருந்தபடியே ஆற்றைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஒரு நாரைகளின் கூட்டம் கரையில் வந்திறங்கியது. அவற்றைக் கலைக்காமலிருக்க ஆடாது அசையாது தலையைத் திருப்பாது இடக்கண்ணால் பார்க்க முடித்தது. மீன்கள் தேடி சிவந்த ஒல்லிக் கால்களால் அவை சளக், சளக் என்று சேற்று நீரை அளைந்த சத்தம் அருகாகக் கேட்டது.

குனிந்த போது அவற்றின் கால்களின் உயரமும் கழுத்தின் நீளமும் சரி சமனாயிருந்தது வியப்பளித்தது. பசியெடுக்கும் வரை அங்கேயே படுத்துக் கிடந்தேன். மெல்ல எழுந்து பார்த்த போது சூரியன் தெரியவில்லை. ஆனால்,எங்கிருந்தோ அதன் மஞ்சள் வெயில் வெளிச்சம் வந்து கொண்டுதான் இருந்தது.

ஆற்றின் கரையோரமாக ஆறு ஓடும் திசைக்கு எதிராக நடக்கத் தொடங்கினேன். காட்டுக்குள் ஊடுருவும் சுலபமான வழி ஆறு செல்லும் வழிதான் என்று சொல்வார்கள். உண்மையில் அது

சுலபமாகவிருக்கவில்லை. பல இடங்களில் வழுக்கும் பாறைகளில் ஏறி இறங்க வேண்டியிருந்தது.

இந்தக் ஆற்றின் பாதை ஆபத்தில்லாமலா இருக்கும்? சேற்றுக் கரையில் தண்ணீர் குடிக்க வந்த மண்ணிறப் பாம்பொன்று கண் திறந்த படி நித்திரையாயிருந்தது. பாம்புக்கு இமைகள் இல்லை என்று அறிந்திருந்தேன். ஆனால், இது பகல் நித்திரை கொள்கிறது என்று தெரிந்தது. அதை எழுப்பாமல் ஆற்றின் கரையோரமாக புற்களின் மேல் மெள்ள நடந்து கொண்டே காட்டின் நறுமணத்தை முகர்ந்தேன். சேற்றின் மணமும் காட்டுப் பூக்களின் மணமும் கொண்ட கலவையாகவிருந்து காற்று.

எப்படி வழியைக் காண்பது? அது சுலபமாகவிருக்கவில்லை. இந்த வழி புல் மலை வரை போகுமா? கால் மூட்டும் அடிபட்ட பின் தலையும் ஒரே நேரத்தில் வலித்துக் கொண்டிருந்தன.

ஒரு இரண்டு ஆள் உயர பாறையொன்று குறுக்கிட்டது. அதில் ஏறிப் பார்த்தபோது தான் நடுக்காட்டினுள்ளே ஓரிடத்தில் புகை மெதுவாக மேலெழுந்து கொண்டிந்தது தெரிந்தது.

சூரிய ஒளி மங்கிக் கொண்டிருந்தது. இருட்டி விட முன்னர் அந்த புகை வரும் இடத்தையடைய வேண்டும். அந்த திக்கில் நடந்து செல்ல அடர்ந்த மரச் செறிவை ஊடறுக்க வேண்டியிருந்தது. மனித சஞ்சாரத்துக்கேற்ற ஒரு வெட்டையேனுமில்லை. ஆச்சரியமாக அந்த புகை ஒரு பெரும் நிழல் மரத்தின் உச்சியூடாக வந்து கொண்டிருந்தது. புகையின் மணம் இப்போது நன்கு மூக்கில் உறைத்தது. இறைச்சியை வாட்டும் மணம்.

மரத்தை அண்மிக்கும்போதே மங்கலாக இருட்டி விட்டது. குடை போல கொப்புகள் கீழ் வளைந்து கரிய பச்சை இலைகளைக் கொண்ட பெரிய நிழல் விருட்சம் அது. அந்தப் பெரும் குடை போன்ற மரத்தை சுற்றி வளைத்துக் கட்டியிருந்த வட்ட வடிவமான வீடு. அதன் சுவர்கள் எல்லாம் காட்டுத் தடிகளையும் சுள்ளிகளையும் கொடிகளால் பிணைத்து நேர்த்தியாகக் கட்டப்பட்டிருந்தன. அந்தக் குடிசைக்கு யன்னல் ஏதும் இருக்கவில்லை. ஒரு முறை குடிசையை சுற்றி வந்து வாசல் ஏதும் இருக்கிறதா என்று பார்த்தேன்.

உள்ளிருந்து, “யாரது” என்றது ஒரு ஆணின் குரல். எனது காலடிச் சத்தம் உள்ளிருந்தவனுக்குக் கேட்டிருக்க வேண்டும். நான் அசையாது நின்றேன். சுள்ளித் தடிளைக் கொண்ட ஒரு கதவு திறந்து தாடியும் நீண்ட கருத்த தலை முடியைக் கொண்டையாகக் கட்டியிருந்த ஒருவன் வெளி வந்தான். எனக்கு நடந்ததை அவனுக்கு சொன்னேன். அவன் தரை வரை முட்டும் நீண்ட சாம்பல் அங்கியொன்றை அணிந்திருந்தான். அது சில இடங்களில் ஓட்டையாகவிருந்ததால் உள்ளே அவன் அணிந்திருந்த டிரௌசர் தெரிந்தது.

“உள்ளே வா” என்று கூறியவனை பின் தொடர்ந்து உள்ளே சென்றேன்.

வீட்டின் நடுவில் பருத்த மரத்தின் அடி வெண்ணிறமாகத் தெரிந்தது. எண்ணெய் விளக்கு ஒன்று இருந்தது. அதனருகிலேயே அமர்ந்து கொண்டோம். உள்ளே இருட்டாகவிருந்ததால் எதுவும் துலக்கமாகத் தெரியவில்லை.

நெருப்பில் வாட்டிய இறைச்சி வத்தல்களை வழவழக்குக்கும் தேக்கிலைகளில் சுற்றித் தந்தான். ஒரு மரக் குடுவையும் பக்கத்தில் இருந்தது. அதில் காட்டுத் தேன் நிரப்பியிருந்தது. வடிக்காத தேன் வதைகள் மிதந்தன. இறைச்சியை தேனில் ஊறவிட்டு ஆறுதலாக கடித்துக் கொண்டே சாப்பிட்ட அவன் பசியில் அவசரமாக விழுங்கும் என்னை பார்த்துச் சிரித்தான். இடையிடையே கறுப்பு கறை படித்த பற்கள்.

நித்திரை கண்களைச் சொருக வைத்தது. நித்திரையிலேயே சாப்பிட்டது போலிருந்தது எனக்கு. அடுத்த அறையில் கட்டில் இருக்கிறது என்று அறையைத் திறந்து காட்டினான். மங்கலான வெளிச்சத்தில் அந்த அறையை நிரப்புவது போல அது நடுவில் தெரிந்தது. கட்டிலின் சட்டங்களில் ஏதோ கொடிகள்.

எனக்கு கொட்டாவி வந்தது. மலையில் ஏறி இறங்கி, காட்டில் நடந்ததின் களைப்பு காலிலும் உடலெங்கும் அலுப்பை தந்தது.

“காலையில் நீ போகும் வழியைப் பார்க்கலாம். போய்ப் படு” என்றான்.

நான் கட்டிலை நோக்கிப் போனேன்.

“கட்டிலை நகர்த்தி ஓரமாகப் போட்டு விட்டுப் படு” என்றான்.

பிறகு பெருங்குரலில் சிரித்தான்.

பிறகு எனக்கு கேட்காதிருக்க தனக்குள் ஏதோ பேசினான். அவன் சொல்லிக்கொண்டே அசைந்து கொண்டிருந்தான். அவன் குரல் மங்கிக் கொண்டே போனது.

கட்டிலில் விழுந்தேன். அது கயிற்றுக் கட்டில். கீழே ஒரு முறை போய் வந்தது. மேலே மரத்தின் கிளைகள் மட்டும் வெளீரென்று தெரிந்தன. இலைகளை இருட்டு மறைத்திருந்தது. மரத்தின் இலைகளே வீட்டின் கூரை என்பதால் பெய்த மழையினால் ஆங்காங்கே நிலத்தில் சிறிய குட்டைகளில் வெள்ளம் தேங்கி நின்றது. நிலம் ஈரமாகவிருந்தது. அது ஒரு விசித்திரமான வெள்ளை நிற கிளைகளுடன் அந்த மரம் குடை விரித்திருக்க காற்று அதன் இலைகளை அடிக்கடி ஊய் ஊய் சத்தத்துடன் உலுப்பிக் கொண்டிருந்தது. ஓயாத வண்டுகளின் இரைச்சல்கள்.

எனக்குத் தெரிய வெள்ளைத் தண்டுடையவை பெர்ச் அல்லது பொப்லார் அல்லது கம் மரங்கள்தான். ஆனால், இந்த மரத்தின் இலைகள் அந்த வகையானதல்ல. ஒரு வேளை மேப்பிள் மரமாயிருந்தால்? ஆனால், அதன் இலைகள் இப்படி பெரியதல்ல. ஒரு வேளை காட்டத்தி



மரமாயிருக்குமோ?

மரத்தை சுற்றிலும் குடைக்கம்பிகள் போல கீழ் நோக்கிச் சரிந்திருந்த அதன் எட்டுக்கிளைகளை கூரை வேயும் தீராந்தி மரங்கள் சரிவாக இறங்கியிருப்பதை போலவே ஆக்கியிருந்தான். அறையின் சுவர் மூலைக்கான கப்புகளை நிலத்தில் நட்டு அவற்றை கிளைகளுடன் பிணைத்திருந்தான். இரண்டாம் முறை பார்த்ததில், நிலத்தில் நின்ற முண்டு கொடுக்கும் கப்புகளும் கிளைகள் இல்லாத மரங்களே என்று தெரிந்தது. மொத்தத்தில் வீடு முற்றாக உயிர் மரங்களாலேயே வடிவமைக்கப்பட்டிருக்கிறது.

இப்போது அவன் என்னை மீண்டும் நெருங்கி வந்தான். இப்போது ஒரு நீண்ட வெள்ளை மேலங்கி அணிந்திருந்தான். நான் சிந்தனையில் ஆழ்ந்திருந்தை பார்த்திருப்பான் போலும்.

"நகரத்தைப் பிரிந்து உனக்கு ஒரு பகல் தானே ஆகிறது. நான் நகரை விட்டும் அவளை விட்டும் பலதடவை பிரிந்திருக்கிறேன். அப்படியான வேலை அது. ஒவ்வொரு முறையும் கிட்டத்தட்ட இரண்டு ஆண்டுப் பிரிவு. உனக்குப் புரியாது."

"இரண்டு ஆண்டுகள் யாரை பிரிந்தாய்?"

"அவளை நான் அகபந்தஸ் என்றே கூப்பிடுவேன்."

"அகபந்தஸா?"

"அகப்பந்தஸ் கிரேக்க சொல்லிலிருந்து வந்தது. கிரேக்க மொழியில் காதல் மலர் என்றழைக்கப்படும் நீல லில்லி மலர் அது."

"உன் பெயர் ஏடன் தானே?"

அவன் அதற்குப் பதில் சொல்லாமல் தொடர்ந்தான்.

"ஒரு வேளை நீ அவளைக் கண்டிருப்பாய்"

கண்ணிமைகளை ஊசி கொண்டு தைத்து விட்டாற்போல நித்திரை என்னை ஆக்கிரமிக்க ஆரம்பித்தது, இன்னும் சிறிது நேரத்தில் அது ஒரு மலைப் பாம்பு போல அகல வாயைத் திறந்து என்னை விழுங்கி விடும்.

அவன் எதுவும் பேசாதிருந்தான். என் கொறட்டைச் சத்தம் எனக்கே கேட்டது.

நான் நீண்ட ஒரு கனவுக்குள் வீழ்ந்து கொண்டிருந்தேன்.

என் கால்களை ஏதோ இறுக்கிப் பிடித்திருக்கிறது. என் கால்கள் கண்ணுக்குத் தெரியாத ஏதோவொன்றினால் கட்டிலின் காலொன்றில் கட்டப்பட்டு கட்டிலில் கிடக்கிறேன். திடீரென

கட்டிலில் எழுந்து உட்கார்ந்தபடியே கட்டிலைக் கைகளால் அசைத்து, முறித்து என்னை விடுவிக்க முயற்சித்தேன். கட்டில் அசைந்து கொடுக்கவில்லை. அது நாலு மரத்தண்டுகளில் நின்றது. நிலத்தில் வேர் கொண்ட மரங்கள் அவை.

ஏடன் இப்போது என் பக்கத்தில் நிற்கிறான்.

“நீ ஒடிஸி படித்திருக்கிறாயா? உனக்கு ஒடிஸியின் கதை தெரியுமா?”

“அவன் யூலிஸிஸ் அல்லவா? ” என்றேன், என் பதற்றத்தை காட்டிக் கொள்ளாமல்.

“ஒடிஸியும் யூலிஸிசும் ஒருவனேதான்.”

“கொஞ்சம் தெரியும்” என்றேன்.

“ட்ரோஜன் யுத்தம் முடிந்து 20 வருடங்களுக்கு மேலாக அலைந்து திரிந்து விட்டு தன் நாட்டுக்கு வரும் யூலிஸிசை எவரும் அடையாளம் காணவில்லை. வளர்த்த நாய் மட்டும் அடையாளம் கண்டது. அவன் ஆண்ட அரசு கை மாறிவிட்டது. மனைவியும் புதிய ஆட்சியில் பெரும் நெருக்கடிக்குள்ளாகிறாள். அடையாளம் தெரியாமல் உருமாறி போயிருந்த யூலிஸிசை அவன் மனைவி பெனிலோப்பியாலேயே நம்ப முடியவில்லை.”

“யூலிஸிசும் பெனிலோப்பியும் உறங்கும் கட்டிலின் ஒருகால் இப்படித்தான் நிலத்தில் வேர் கொண்ட உயிருள்ள ஒலிவ மரத்தினாலேயே செய்யப்பட்டிருக்கும். அதை செய்வித்தவனே யூலிஸிஸ்தான். அவனுக்கும் பெனிலோப்பிக்கும் மட்டுமே தெரிந்த ரகசியம் இது. அந்த கட்டிலின் ரகசியத்தை கொண்டே உருமாறி வந்தவன் யூலிஸிஸ் என்று உறுதிப் படுத்தினாளாம் பெனிலோப்பி.”

“ஆனால், கிரேக்க அழகியான பெனிலோப்பிக்கும் அகபந்தஸுக்கும் பொதுவானது அழகு ஒன்று மட்டும்தான்.”

ஏடன் அறைக்கு வெளியே போய்விட்டு திரும்பவும் வருகிறான். இப்போது கையில் ஒரு தீப்பந்தத்துடன் கண்களில் ஒரு குரூரச் சிரிப்புடன் என் கட்டிலை நோக்கி வருகிறான். என்னை கட்டிலுடன் சேர்த்துக் கொழுத்தப் போகிறானா? ஆனால், அவன் என் தலைமாட்டைக் கடந்து செல்கிறான்.

என் தலைக்குப் பின்புறம் சென்று ஏடன் என் பார்வைக்கு மறைந்ததும் தலையைச் சுற்றிலும் பெரும் வெப்பதையுணர்ந்தேன். அடுத்த கணம் ஒரு குளிர் காற்று வீசியது. அது எங்கிருந்து வந்தது என்று தெரியவில்லை. அதில் பூவின் மணங்களோ அல்லது ஈர மண்ணின் மணமோ இருக்கவில்லை. காய்ந்த பூங்கொத்திலிருந்து வரும் நெடி போல இருந்தது.

தரையைத்தொடும் நீண்ட வெண்நிற அங்கியுடன் அகபந்தஸ் உள்ளே வந்தாள். தோட்டத்தில் கண்ட அதே முகம். குனிந்து என்னை முத்தமிட்டாள். அவள் உதடுகளிலிருந்து ஒரு வாசனை, அது எனக்கு போதையை தருகிறது. என் கால் கட்டுக்களை அவிழ்த்து விடுகிறாள். பிறகு வாசலை நோக்கி அவள் திரும்புகிறாள். வெண்ணிற உடையினூடே தெரியும் அவள் பின்புற அழகைக் கண்டு பைத்தியம் பிடித்தவனைப் போல அவளைத் தொடர்ந்து போகிறேன். அடுத்த அறைக்குள் அவள் சென்று கதவை மூடிக் கொள்கிறாள்.

இப்போது ஏடன் எனது அறைக்குள்ளிருந்து வெளியே வருகிறான்.

“அகபந்தஸ் மலரை உன்னிப்பாகப் பார்த்திருக்கிறாயா? அது பந்து போல ஒரு தண்டிலிருந்து முகிழ்த்து வருவது போல்தெரியும் ஆனால், அதனுள்ளே பல சிறிய மலர்கள் தனித்தனியே இருக்கின்றன.”

“அவளும் பல மலர்களாகத் தன்னை விரித்துக் கொண்டாள். அவள் கட்டுக் கடங்காதவள்.”

நான் அதிர்ச்சியுடன் அவன் சொல்வதை கேட்டுக் கொண்டிருந்தேன்.

ஏடனின் கையிலிருந்த வெளிச்சத்தில் இப்போது உள்ளே எட்டு அறைகள் இருப்பது தெரிந்தது. எட்டு அறைகளும் வட்ட வீட்டின் பகுதிகளாக இருந்ததால் அவை ஒவ்வோன்றும் பெரிய முக்கோணத்தினை ஒத்ததாகவிருந்தன.

அவன் ஒவ்வொரு அறையாக என்னை அழைத்து கொண்டு வட்டமாக வலம் வருவதற்கு அழைத்தான்.

“ஏழு முறை பயணங்கள் செய்தேன். ஒவ்வொரு பயணத்தின் போதும் ஒவ்வொரு அறையும் ஒவ்வொரு கட்டிலும் புதிதாக செய்ய வேண்டியிருந்தது. இன்றைக்கு எட்டாவது அறையைத் தயார் செய்தேன் என்றான்.”

நான் திடுக்கிட்டு நடுவில் நின்ற மரத்தின் அடியைப் பார்த்தேன். ஒவ்வொரு அறைக்கும் எதிரே மரத்தில் ஒவ்வொரு பெயர் செதுக்கப்பட்டிருந்தது. அவனைப் பின் தொடர்ந்து ஏழு அறைகளைக் கடந்தேன். எட்டாவது அறைக்கு வர அது மீண்டும் நான் படுத்திருந்த அறைக்கே வந்தடைந்தது. இப்போது நான் மரத்தின் அடியை நோக்கி ஓடுகிறேன். கால்கள் நடுங்க மரத்தைப் பார்த்து என் பெயர் அதில் பதித்திருந்ததைக் கண்டு கொண்டேன். ஏடன் பின்புறமாக வந்து ஒரு கையால் என் கழுத்தை இறுக்கிக் கவ்விப் பிடிக்கிறான். என் சத்தம் வெளி வரவில்லை. என் சக்தியை மீறி அலறுகிறேன்.

“என்னை விட்டு விடு” என்ற எனது கதறல் எங்கும் எதிரொலிக்கிறது.

விழித்ததும், என் முகத்தில் வீழ்ந்திருந்த நீர்த்துளிகளைத் துடைத்துக் கொண்டேன். அவை மரத்திலிருந்து வீழ்ந்த துளிகள். ஒரு கோடை மழை தூறிச் சென்றிருக்க வேண்டும்.

ஆனால், அது ஒரு பிற்பகல் என்பதையுணர்ந்து கொள்ள என் மூளைக்குச் சில கணங்கள் எடுத்தன. நான் இப்போது படுத்திருந்தது கட்டிலிலும் அல்ல என்பது தெரிந்த பின்னரே நான் வீழ்ந்து கிடந்தது மலையுச்சியில்தான் என்பதை புரிந்துகொண்டேன். குடை மர வீட்டில் ஏடனைக் கண்டதும் கனவுதான்

(தொடர்ச்சி 32ஆம் பக்கம்)

# தன்னெழுத்தின் புது வகைமை

யாழன் ஆதி

**இயல்பால் அறிவோம் - சி.முத்துகந்தன்; பக்கம் 136; விலை ரூ. 130; பாரதி புத்தகாலயம், 421 அண்ணாசாலை, தேனாம்பேட்டை, சென்னை 600018; ªதாலைபேசி: 044 24332424; மின்னஞ்சல்: thamizhbooks@ gmail.com**

வாசித்தல் அனுபவம் என்பது மானிடரின் அரிய பண்பு. மனிதர்கள் தங்கள் அறிவினை வாசித்தல் என்னும் செயல்பாட்டின் மூலம் பெற்றார்கள். அனுபவமும் வாழ்வியலும் தரும் படிப்பினைகள் கருத்துருக்களாக மாறி, அவை எழுத்துகளாக உருவமாறும் போது படைப்பின் ஆதாரம் நமக்கு வாய்த்துவிடுகிறது. அது அறிவியலாக இருந்தாலும் புனைவாக இருந்தாலும் மேம்பட்ட தன்மையில் சொல்லப்பட்டவை படிப்பதற்கு என்றான பின்தான் அவை அறிவின் கூறுகளாக மாறுகின்றன.




சி. முத்துகந்தனின் 'இயல்பால் அறிவோம்' நூலும் ஒருவிதமான வாசிப்பின் அனுபவத்தை நமக்கு உணர்த்துகிறது. ஓர் அரூப ஓவியத்தைக் காணும் பார்வையாளனின் மனம் வரையும் சித்திரங்கள், அவர் பார்க்கும் ஓவியத்தின் ஊடாக வாழ்வைப் பார்க்கிற தன்மையைப்போல், முத்துகந்தனின் இந்தப் பத்திகள் மூலம் நம் வாழ்வை நாம் பார்க்கிறோம்.

முத்துக்கந்தன் சொல்லுகிற பலூன், வெடிக்காமல் நெடுஞ்சாலையின் அடர்த்தி மிகுந்த போக்குவரத்தில் பத்திரமாகக் கடந்து சென்றுவிடாதா என்று நாமும் அல்லலுறுகிறோம். ஆனால், அவர் சொல்லும் பலூன் வெறும் பலூன்தானா? காற்று அடைக்கப்பட்ட அந்த ரப்பரைப் போல மூச்சுக்காற்று அடைக்கப்பட்ட மனிதர்கள் இங்கே பத்திரம் தானா? இந்த வாழ்வு நெரிசலில் அவர்கள் உடையாமல் போய்விடுவார்களா? சில பலூன்கள் இங்கு உடைப்பதற்காகவே ஊதப்படுகின்றனவே; அந்தப் பலூன்களின் காற்று வெளியேறாமல், அமைகிற சமூக அமைப்பிற்கான ஏக்கப் பெருமூச்சுகள், இந்த நாட்டின் வெளியெங்கும் சுற்றி அலைகின்றனவே. அவற்றின் மீதான நம் எதிர்வினை என்ன என்றெல்லாம், நம் எண்ணங்களை ஓட்டும் தன்மை இந்த நூலின் எழுத்துகளுக்கு உண்டு.



ஒன்றொடு ஒன்று தொடர்பில்லாத, ஆனால், சகட்டு மேனிக்கு எல்லாமே ஒரு நாவலின் பத்திகளின் போல காணப்படுவது என்பது புதிய வகைமை.

புதிய தொழில்நுட்பங்கள், வரலாறுகளைக் கூட பேட்டரி தீர்வதற்குள் பதிவு செய்ய வைக்கிறது. வாயாலே பேசி, பேச்சு செய்த நூல்களைப் பேசாமலேயே விற்றுவிடக்கூடிய சூழலில், எங்களைப் போல எழுது என்னும் குரலுக்குத் தேவையான பதிலை கொடுத்துக்கொண்டே தான் இருக்கின்றன. உரையாடல்களும் அதனால் ஏற்படும் அறிவின் மாறுபாடுகளும் குறித்த விவாதங்கள் எழுப்பப்பட்டபோதும், கடவுளாகிவிட்ட மாணவர்களும் மணற்கூடுகைக்கு வந்த பெருங்கவிக்கோவும் ஒற்றை உரையாடலைக் கேட்காதவர்களாக மாறிவிடுகின்றனர். அறிவியல், ஓவியம் சிற்பம் என விரிந்துகிடக்கும் மொழியின்



முத்துகந்தன்

பரிமாணங்களைத் தவிர்த்து, வெறும் கலை இலக்கியங்களை மட்டும் மொழியின் கூறுகளாக மாற்றுவதைக் குறித்து எழுதப்பட்ட பத்திகளில், முத்துகந்தன் பல புதிய சிந்தனைகளைப் பதிவிடுகிறார்.

எழுதுதல் என்பது எதற்காக? வாசித்தலைக் கோருதல் மட்டுமா அல்லது தன் தினவைத் தீர்த்துக்கொள்ளவா? எங்கு போனாலும் வந்துவிடும் வீட்டுப் புறாக்களைப் போல்தான் எத்தனைத் தத்துவங்களைப் பேசினாலும் எழுதினாலும் வாசித்தாலும் இயல்புக்கு வரும்போது நெட்டித்தள்ளுகிறது யதார்த்தம்.

அறம் எது என்பதை அறிவதிலிருந்துதான் உயிர்பெறுகிறது. எழுத்துத்தோன்றும் உணர்வுச்சூழல், எழுத்தைப் பிரிக்கும் சமூகச்சூழல், பாலின சமத்துவம் பேசிக்கொண்டே பால்கவர்ச்சிக்கு ஆளாவதை ஆண் புத்தி அறுபடாமை என்கிறார் முத்துகந்தன். மொழி பேதம் பார்க்காமல் இருக்கிறது. ஆனால், மேல் எழுத்து - கீழ் எழுத்து, ஆண் எழுத்து - பெண் எழுத்து, புரியும் எழுத்து - புரியாத எழுத்து எனப் பிரித்துக்காட்டும் கோடுகள் நம்மிடம் நிறைய இருக்கிறது. எவ்வெழுத்தாயின் என்ன, மானுட உயிர்ப்புக்காகவும் அவர்களின் மாண்புக்காகவும் எழுதப்படும் எதுவும் அதிகாரத்தின் குரலாக இல்லாமல் பண்பாட்டின் குரலாக, மாற்றுக் குரலாக அமையவேண்டும் என்னும் கருத்தியல் களத்தில் தன் காய்களை நகர்த்துகிறார் முத்துகந்தன்.

எழுத்தின் மூலத்தைக் குறித்த விவரணைகள் முக்கியமானவை. மக்களிடமிருந்து எழுதப்படும் எதுவும் அவர்களின் அப்பட்டமான வாழ்வைப் பேசக்கூடியதாக இருக்கும். வயதானப் பாட்டியும் அன்னம்மாவும் காட்டும் மொழியின் கெட்டித்தன்னமை, புனைவு வழி வாய்க்கும்போது, எழுத்தையும் பேச்சையும் இந்தச் சமூகம்தான் கொடுக்கிறது. அதன் தரவுகள் அனுபவங்களின் மீது கட்டமைக்கப்படுகின்றன. மனித சமூகத்தை அவர்கள், இவர்கள் எனப் பிரிக்காமல் எழுதுவதற்கான அனுபவங்கள், பயணங்கள், தரவுகள் மூலம் உருவாக்கப்படுதம் மிக அவசியமாகிறது.

குழந்தை மனநிலை என்பது தூயநிலை. அந்நிலை பல படைப்பு வெளிகளைக் கொண்டது. அவர்களின் கிறுக்கல்கள் பல நவீன ஓவியங்களின் அடித்தளமாகிறது. ஒரு பறவையின் முதல் பறத்தலில் அசையும் சிறகுகளின் அழகியல் அது என்பது முத்துகந்தனின் நுண் கவனிப்பு. எல்லோருக்குமான எழுத்தை உண்டாக்கும் தளத்தில் தலித்தியம், பெண்ணியம் எனக் கட்டமையும் விளிம்புநிலை எழுத்துக்களையும் நம் வாசிப்பில் மட்டுமல்ல உள்வாங்கலிலும் வாழ்விலும் வரவு வைக்கவேண்டும்.

குழந்தைமையின் மீதான ஆச்சரியம் குன்றாத பல அவதானிப்புகளை முத்துகந்தனின் பத்திகள் கூறுகின்றன. அவர்களின் அனைத்துப் பருவ நிலைகளிலும் அவர்களுக்கான மனம் என்னும் அந்தப் பந்தில் எப்போதும் நிறைந்திருக்கும் வாழ்மையின் தன்மை பொதுவில் உணரக்கூடியதாக இருக்கவேண்டும். கல்லூரி மாணவர்களின் வாழ்வியல் என இப்பத்திகள் அலசுவது, ஓர் ஆசிரியர் தன் மாணவர்களின் மீது கொண்டிருக்கும் அக்கறையும் அதனை அவர் வெளிப்படுத்தும் உளவியல்ரீதியான முறைமைகளும் ஈண்டு நோக்கத்தக்கன.

ஓர் ஆவணப்படம் எடுப்பதாய் இருந்தாலும் ஒரு எழுத்தோவியத்தை உருவாக்குவதாக இருந்தாலும், மெய் என்பது அடிப்படை. நல்லறத்தை மையமாகக் கொண்டதே ஆகச் சிறந்த எழுத்தும் பேச்சும். சுயவிமர்சனம், சுயானுபவம் இவற்றினூடே தோன்றும் படைப்பில் நிகழும் மெய்ம்மையின் கூற்றினை ஐ.டி பணியாளர்களை வைத்து கவிதை எழுதச் செய்வதின் மூலம் உணர்த்துகிறார் முத்துகந்தன்.

ஏழு அத்தியாயங்களில் முத்துகந்தன் தரும் வாசிப்பு அனுபவம் மிகவும் மாறுபட்டவைகளாக அமைகிறது. ஒவ்வொன்றை முடிக்கும்போதும் தொடங்கும் மனநிலை அடுத்த பத்தியிலும் பற்றிக்கொள்கிறது என்பது இந்த வகைமையின் புது வடிவமாக இருக்கிறது.

நூலை வாசித்து முடிக்கையில் ஒரு தனி மனிதனின் வாழ்வுக்குள் நாம் சென்றுவந்த உணர்வெழுச்சி நமக்குள் ஏற்படுகிறது. அந்தத் தனிமனிதனின் தேடல்கள் நம் தேடல்கள்; அந்தத் தனிமனிதனின் தத்துவம் நம் தத்துவம். அந்தத் தனிமனிதன் அடைய விரும்பும் படைப்பின், கலை இலக்கியங்களின் தகுதி நாம் அடைய நினைப்பது. அந்தத் தனிமனிதன் கோரும் சமூகம் நாம் கோருவது. அந்தத் தனிமனிதன் ஆசைப்படும் வாழ்க்கை நாம் நிறுவ முனையும் வாழ்க்கை. முத்துகந்தனின் நூலில் இதை நாம் இயல்பாய் அறியலாம். ●

**யாழன் ஆதி** <yazhanaathi@gmail.com>

# அம்ருதா பதிப்பகம் வெளியீடுகள்

முத்துக்கள் பத்து வரிசை நூல்கள்
சிறந்த எழுத்தாளர்களின் தேர்ந்தெடுத்த 10 சிறுகதைகள்

**பி. எஸ். ராமையா**
பக். 80, விலை ரூ. 50

**புதுமைப்பித்தன்**
பக். 48, விலை ரூ. 30

**ந. பிச்சமூர்த்தி**
பக். 80, விலை ரூ. 50

**எம். வி. வெங்கட்ராம்**
பக். 64, விலை ரூ. 50

**லா. ச. ரா**
பக். 80, விலை ரூ. 50

**கல்கி**
பக். 96, விலை ரூ. 60

**தி. ஜ. ர**
பக். 80, விலை ரூ. 50

**தி. ஜானகிராமன்**
பக். 96, விலை ரூ. 60

**ஜெயகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**கு. அழகிரிசாமி**
பக். 96, விலை ரூ. 60

**அசோகமித்திரன்**
பக். 64, விலை ரூ. 40

**சா. கந்தசாமி**
பக். 112, விலை ரூ. 70

**ஆ. மாதவன்**
பக். 80, விலை ரூ. 50

**ஆதவன்**
பக். 96, விலை ரூ. 60

**பிரமிள்**
பக். 96, விலை ரூ. 60

**வண்ணநிலவன்**
பக். 64, விலை ரூ. 40
**வண்ணதாசன்**
பக். 64, விலை ரூ. 40

**நாஞ்சில்நாடன்**
பக். 80, விலை ரூ. 50

**ராஜம் கிருஷ்ணன்**
பக். 112, விலை ரூ. 70

**விட்டல்ராவ்**
பக். 64, விலை ரூ. 40

**பா. செயப்பிரகாசம்**
பக். 160, விலை ரூ. 100

**நீல. பத்மநாபன்**
பக். 80, விலை ரூ. 50

**தமிழ்ச் செல்வன்**
பக். 64, விலை ரூ. 40

**கந்தர்வன்**
பக். 80, விலை ரூ. 50

**கோணங்கி**
பக். 64, விலை ரூ. 40

**சூர்யகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**ஜெயந்தன்**
பக். 160, விலை ரூ. 100

**மொழிபெயர்ப்பு நாவல்கள்**
**மிருகங்களின் பண்ணை**
ஜார்ஜ் ஆர்வெல்
பக். 120, விலை ரூ. 75

**பாரதிபுரம்**
யு.ஆர். அனந்தமூர்த்தி
தமிழில்: தி.சு. சதாசிவம்
பக். 240, விலை ரூ. 150

**பிறவாத குழந்தைக்கு ஒரு கடிதம்**
ஓரியானா ஃபேலஸி
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**பெண்ணே கேள்**
கிருஷ்ணா ஸோப்தி
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 112, விலை ரூ. 70
**சிதைந்தகூடு**
தாகூர்
பக். 80, விலை ரூ. 50

**நெருப்பு நிலா**
வாசி ரெட்டி சீதா தேவி
பக். 160, விலை ரூ. 100

**ஒரு லாரி டிரைவரின் கதை**
சிங்கிஸ் ஐத்மாத்தவ்
தமிழில்: தா. பாண்டியன்
பக். 128, விலை ரூ. 80

**மாயாபுராணம்**
பி. சுரேந்திரன்
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**மொழிபெயர்ப்பு சிறுகதைகள்**
**சல்வடார் டாலி**
உலகச் சிறுகதைகள்
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 192, விலை ரூ. 120

**குதிரில் உறங்கும் இருள்**
பாப்லோ நெருடா
பக். 112, விலை ரூ. 70

**ஒரு வார்த்தையின் பொருள்**
ப்ரஃபுல்லா ராய்
வங்காளத்தில் இருந்து: புவனா நடராஜன்
பக். 224, விலை ரூ. 140

**அண்மைக்காலவங்காளச்சிறுகதைகள்**
தமிழில்: சு. கிருஷ்ணமூர்த்தி
பக். 240, விலை ரூ. 150

**அன்புள்ள பிலாத்துவுக்கு**
பால் சக்கரியா. தமிழில்: திலகவதி
பக். 96, விலை ரூ. 60

**யௌவனத்தின் கடல்**
நவீன மலையாள சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: குளச்சல் மு. யூசுப்
பக். 288, விலை ரூ. 180

**உள்ளுக்குள் ஓடும் ஆறு**
வடகிழக்கு இந்திய சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: வெ. இன்சுவை
பக். 144, விலை ரூ. 90

**மண்வாசல்**
பிரேம்சந்த்
தமிழில்: ரமேஷ்குமார்
பக். 96, விலை ரூ. 60

**சிறுகதைகள்**
**சித்திரக்கூடம்**
லஷ்மி மணிவண்ணன்
பக். 128, விலை ரூ. 80

**அன்னை தந்த ஒளி**
பெ. தூரன்
பக். 80, விலை ரூ. 50

**அறிஞர் அண்ணா சிறுகதைகள்**
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 160, விலை ரூ. 100

**அவள் அதுவானாள்**
பா. விசாலம்
பக். 80, விலை ரூ. 50

**வான்கோவின் காது**
கீதாஞ்சலி
பக். 112, விலை ரூ. 70

**பழைய காலண்டரில் இருதினங்கள்**
பாலு சத்யா
பக். 128, விலை ரூ. 80

**மீண்டெழுதல்**
இல. வின்செண்ட்
பக். 128, விலை ரூ. 80

**வண்ணத்துப் பூச்சிகளும் பெண்களும்**
சூர்யகுமாரன்
பக். 120, விலை ரூ. 75

**நாவல்**
**சுகுண சுந்தரி சரித்திரம்**
வேதநாயகம் பிள்ளை
பக். 112, விலை ரூ. 70

**முள்ளும் மலரும்**
உமா சந்திரன்
பக். 288, விலை ரூ. 180

**டணாயக்கன் கோட்டை**
இ. பாலகிருஷ்ணநாயுடு
பக். 480, விலை ரூ. 300

**அசன்பே சரித்திரம்**
எம்.சி. சித்திலெவ்வை
பக். 128, விலை ரூ. 80

**ஓடும் நதி**
சுப்ரபாரதிமணியன்
பக். 240, விலை ரூ. 150

**சாகசப் பறவைகள்**
எஸ்ஸாரெஸ்
பக். 180, விலை ரூ. 90

**கட்டுரைகள்**
**இந்தியா - மர்மமும் சவாலும்**
இ.எம். பாஸ்டர்
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 192, விலை ரூ. 120

**உலகை மாற்றிய புத்தகங்கள்**
ராபர்ட் டவுன்ஸ்
பக். 240, விலை ரூ. 150

**ஜெயகாந்தன் சிந்தனைகள்**
தேர்வும் தொகுப்பு: திலகவதி
பக். 112, விலை ரூ. 70

**தமிழகக் கோட்டைகள்**
விட்டல்ராவ்
பக். 240, விலை ரூ. 150

**என் பார்வையில் படைப்பிலக்கியம்**
முருகேச பாண்டியன்
பக். 240, விலை ரூ. 150

**என்றென்றும் வாழும் படைப்புகளும் படைப்பாளர்களும்**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**மூச்சுத் திணறுது பூமி**
மருத்துவர் வி. ஜீவானந்தம்
பக். 120, விலை ரூ. 75

**பெண்ணொன்று கண்டேன்**
பாமரன்
பக். 112, விலை ரூ. 70

**ஆரிய உதடுகள் உன்னது**
பாமரன்
பக். 64, விலை ரூ. 40

**சொல்லப்படாத உலகம்**
யமுனா ராஜேந்திரன்
பக். 96, விலை ரூ. 60

**பாலமாகி நிற்கும் பணி**
யமுனா ராஜேந்திரன்
பக். 160, விலை ரூ. 100

**ஈழத்து அரசியல் நாவல்**
யமுனா ராஜேந்திரன்
பக். 112, விலை ரூ. 70

**திரைப்படங்களான இலக்கியங்களும் நாடகங்களும்**
அறந்தை மணியன்
பக். 128, விலை ரூ. 80

**திரைவெளி**
சுப்ரபாரதிமணியன்
பக். 128, விலை ரூ. 80

**அசோகமித்திரன் 77**
சுப்ரபாரதிமணியன்
பக். 144, விலை ரூ. 90

**நெஞ்சு பொறுக்குதில்லையே**
சாவித்திரி கண்ணன்
பக். 192, விலை ரூ. 120

**கிட்டத்தட்ட கடவுள்**
சி. சரவணகார்த்தியேன்
பக். 154, விலை ரூ. 135

**பாம்பின் கால்த்தடம்**
பிரபு திலக்
பக். 200, விலை ரூ. 125

**பறை**
மருத்துவர் எம். வளர்மதி
பக். 144, விலை ரூ. 90

**தமிழ்ச் சூழலில் அறிவியல் புதினங்கள்**
நெல்லை சு. முத்து
பக். 192, விலை ரூ. 120

**மிக அருகில் மிருகம்**
மருத்துவர் ஆர். கோவிந்தராஜ்
பக். 128, விலை ரூ. 80

**கவிதை**
**விக்ரமாதித்யன் கவிதைகள்**
தேர்வும் தொகுப்பும்: வித்யாஷங்கர்
பக். 560, விலை ரூ. 350

**சொட்டுச் சொட்டாய் விழுகின்றன செவ்வரளிப் பூக்கள்**
என்.டி. ராஜ்குமார்
பக். 80, விலை ரூ. 50

**காதலியர் மேன்மை**
தபசி
பக். 160, விலை ரூ. 100

**திரைக்கதை**
**இம்சை அரசன் 23ஆம் புலிகேசி**
சிம்பு தேவன்
பக். 160, விலை ரூ. 100

**ஆட்டோகிராப்**
சேரன்
பக். 208, விலை ரூ. 130

**நாடகம்**
**முன்மேடை**
அ. ராமசாமி
பக். 144, விலை ரூ. 90

**கள்ளத் தோணி**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**வாழ்க்கை வரலாறு**
**பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு**
ஏ.எல். நடராஜன்
பக். 240, விலை ரூ. 150

**சுய முன்னேற்றம்**
**வாழ்க்கை வாழ்வதற்கே**
மருத்துவர் திருநாவுக்கரசு
பக். 160, விலை: ரூ. 210

**மனம்**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 112, விலை ரூ. 70

**போதை?**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 160, விலை ரூ. 100

**வெற்றிப்பாதை**
சுரேஷ்குமார்
பக். 128, விலை ரூ. 80

## திலகவதி நூல்கள்

**கல்மரம்**
சாகித்திய அகாதமி விருது பெற்ற நாவல்
பக். 96, விலை ரூ. 60

**உனக்காகவா நான்**
நாவல்
பக். 80, விலை ரூ. 50

**நேசத்துணை**
நாவல்
பக். 128, விலை ரூ. 80

**சொப்பன பூமியில்**
நாவல்
பக். 104, விலை ரூ. 65

**தமிழ்க் கொடியின் காதல்**
நாவல்
பக். 144, விலை ரூ. 90

**மூங்கில் திரை**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**மரப்பாலம்**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**முத்துக்கள் பத்து**
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தீப்பறவையின் கூடு**
சிறுகதைகள்
பக். 186, விலை ரூ. 120

**சக்கர வியூகம்**
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தொப்புள் கொடி**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**உங்களுக்காக உலக சினிமா**
கட்டுரைகள்
பக். 360, விலை ரூ. 225

**காலந்தோறும் அறம்**
கட்டுரைகள்
பக். 96, விலை ரூ. 60

**நபி (ஸல்) நமக்குச் சொன்னவை**
கட்டுரைகள்
பக். 120, விலை ரூ. 75

**சேகுவேரா**
வாழ்க்கை வரலாறு
பக். 80, விலை ரூ. 50

**முடிவெடு**
சுய முன்னேற்ற நூல்
பக். 144, விலை ரூ. 90

**இப்படித்தான் வென்றார்கள்**
கேள்வி-பதில்கள்
பக். 208 , விலை ரூ. 130

**காலத்தின் கண்ணாடி**
தொகுப்பு நூல்
பக். 1200, விலை ரூ. 750

**கோடை உமிழும் குரல்**
தொகுப்பு நூல்
பக். 400, விலை ரூ. 250

---

நூல்களை பெற +91 94440 70000 என்ற எண்ணுக்கு அழைக்கவும். அல்லது குறுஞ்செய்தி / வாட்ஸ் அப் செய்தி அனுப்பினால் நாங்கள் தொடர்புகொள்கிறோம். info.amrudha@gmail.com மின்னஞ்சல் முகவரி மூலமாகவும் தொடர்புகொள்ளலாம்.

அம்ருதா சந்தாதாரர்கள் நூல்களை 60% விலை குறைப்பில் பெற்றுக்கொள்ளலாம்.

நூல்களை சென்னை அம்ருதா அலுவலகத்திலும் புத்தகக் காட்சிகளில் அம்ருதா ஸ்டால்களிலும் நேரிலும் பெற்றுக்கொள்ளலாம்.

---

**அம்ருதா, 1 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு, மூன்றாவது பிரதான சாலை, சிஐடி நகர் கிழக்கு, நந்தனம், சென்னை - 600035**



# லாவண்யா சுந்தர்ராஜன் கவிதைகள்

ஓவியம்: சைதாலி சாட்டர்ஜி

## மீராவைப் போலொரு மயிலிறகு

வேணு கானம் கேட்ட
மயிலொன்று
கொத்திக் கொண்டிருந்த
பயிர்களை விடுத்து
ஒருகணம் நிமிர்ந்து
மீன் சிக்கிய தூண்டில் போல
கழுத்தை அசைத்தது
தன் மனங்கவர் கள்வனின் குரலுக்குப் பரிசாக
மயில்கண் ஒன்றை
விட்டுச் சென்றது

தோகையிலிருந்து பிரிந்த மயிலிறகு
கானம் எழும்போதெல்லாம்
பறந்தெழுந்து
கொண்டல் வீசும் வெளியெங்கும்
விம்மி விம்மித் திரிந்தது
குழல் கொண்டவன்
கரங்களை சேர
மண்ணில் புரண்டு தவித்தது
கண்ணன் கைகளில் தவழும் நாளையெண்ணி
தன் மேனியைக் கழுவிப் பேண
நீரில் மிதந்து அலைபாய்ந்தது

இறுதியில் வந்த மாயன்
விரல்களில் எந்திய மயிலிறகை
ஏறிட்டு ஒருகணமும் பாராமல்
தன் தலைக் கீரிடத்தில்
செருகிப் போனான்
'இதற்குத் தானா' என்றடங்கியது
மயில் கண்.

## மிதக்கும் எண்ணங்கள்

விரிந்து பரந்த பிரபஞ்சம்
விளிம்பற்ற பாழ்வெளி
அதனுள் ஆழி சூழ் உலகு
பூமி மேலே சராவதி நதி
நதி மேலே நகரும் படகு
படகின் மேலொரு பேருந்து
அதன் எல்லா இருக்கைகளிலும்
மனிதர்கள்
அம் மனிதர்களிடத்தே
ததும்பி நிற்கும்
தனித்தனி மனங்கள்
ஒவ்வொரு மனதிலும்
ஓராயிரம் எண்ணங்கள்
படகு அக்கரை அடைந்ததும்
தரையிறங்கிப் போகும் மனிதர்கள்
தனித்து நடக்க
சிறகுமுளைத்த சிந்தனைகளோ
அவர்களை எடையற்று
பறக்கச் செய்தது



## முடிவிலி காதல்

வனமொரு வண்ணமிழைக்கும் தூரிகை
பெயரறியா நடனதேவதையின்
அருவமான அசைவுகளை
உருவமாய் தீட்டுகிறது
மரங்களில் கிளைக் கைகள்
இன்னும் அரங்கேற்றாத அடவுகள் அவை

பசும் ஆழத்தில்
கண்ணெட்டாத தூரத்தில்
காற்றோ மூங்கிலோ வண்டுகளோ
புரியாத ராகங்களை இசைத்தது
எத்தனை முறை கேட்டாலும்
ஒரே ஒருபுள்ளியில்
வேறுபடும் QR code
போன்றவை அவை
எல்லாம் ஒன்று போலும்
என்றாலும் வேவ்வாறனவை

சிலசமயம்
இலைகளையும் மலர்களையும் உதிர்த்துவிட்டு



பல்வேறு நிறத்துப் பறவைகளைப்
பூத்த மரங்களை
சிலையென வடித்து வைத்திருக்கும்

எல்லாம் சரி காடென்பது
பசுமையா மரங்களா மலர்களா
கண்ணால் காண்பதும்
காதால் கேட்பதும் அல்ல
வனம்
அது காலம் காலமாய் தொடரும்
முடிவிலி காதல்

## குட்டி பட்டாசு

நயரா பளிகிரனே என்ற
குட்டி பட்டாசுக்கு எல்லாமே ஆச்சரியம் தான்
பயணவெளியில் திரியும் எருமை
கண்ணை விரித்து சின்னதாய் வெடித்துக் குதிக்கும்

திருமண நிகழ்வில்
விதவிதமான திண்டிகளை இடக்கையால் தள்ளிவிட்டு
ஐஸ்கீரிமில் குளிக்கும்
ஐந்தாறு தின்றபின் தடுக்கும் போது
முறைத்து வெடிக்கும்
தட்டிவிட்டேன் என்று குதித்து பெரிதாய் ஓலமிடும்

அப்பாவின் காலில் அடிபட்டு விட்டது
அழுது கொண்டே விம்மி வெடிக்கும்
பிறகு அடிப்பட்ட அப்பாவை போல்
நடந்து காட்டி சிரிக்கும்

சாக்லேட் கொடுத்தால் வாங்கிக் கொண்டு குதிக்கும்
அதில் கிருஸ்மஸ் தாத்தா வடிவில் இருக்கும்
இனிப்பை எப்படிச் சாப்பிடுவது என்று தவிக்கும்

தினமும் ஒருமுறையேனும்
குரங்குக் குட்டி போலத்
தோளைத் தொற்றிக்கொள்ளும்

குட்டி பட்டாசு கூட இருக்குமந்த
இரவல் நேரம்
இரவு வீட்டுக்கு வந்த பின்னும்
என் தனிமையில்
வெடித்துக் கொண்டேயிருக்கும்

**லாவண்யா சுந்தர்ராஜன்**
<lavanya.sundararajan@gmail.com>

# எதிர்ப்பு நாகரிகம்

இந்திரா பார்த்தசாரதி

**விவாதச் சூட்டில், அவர்கள் தங்களுடைய ஆடைகளை ஒவ்வொன்றாக, டை, கோட், சட்டை, பனியன், பான்ட் என்று கழற்றித் தன்னிச்சையாகத் தந்துகொண்டேஇருக்கின்றனர். அதே சமயத்தில் அவர்கள் விவாதத்தை நிறுத்தவில்லை. நாட்டில் அக்கிரமம் நடக்கும்போது, நம் நாட்டில் இப்பொழுது காட்சி ஊடகங்களில் நடக்கும் சூடான விவாதங்களை நினைவுறுத்தக் கூடும்!**

சில ஆண்டுகளுக்கு முன்பு தில்லி சென்றிருந்தேன்.

'லௌஞ்சி'ல் ஒரு நாள் குர்த்தா, பைஜாமா அணிந்த ஒரு நடுத்தர வயதுக்காரர் என்னிடம் வந்து 'நமஸ்தே' என்றார். அவர் யாரென்று எனக்குத் தெரியவில்லை. அறிமுகப்படுத்திக் கொண்டார். அவர் அப்பா ஒரு ஹிந்தி எழுத்தாளர். 'எமர்ஜென்சி'யின் போது எழுதுவதை நிறுத்திவிட்டு 'பான்' கடை வைத்து, 'இச்சூழ்நிலையில் என்னால் எழுத முடியாது' என்று தம் எதிர்ப்பைத் தெரிவித்தார். யாரும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை, இந்திரா காந்தி உள்பட. பிறகு போலந்து போயிருந்தபோதுதான் இத்தகைய எதிர்ப்புக்கு என்ன பெயர் என்று தெரிந்துகொண்டேன்.

'Internal Immigration' என்ற ஒரு புது சொல்லாட்சியை நான் போலந்தில் இருந்தபோது (1982-86) கேட்டேன். அப்பொழுது போலந்தில் ராணுவச் சர்வாதிகார ஆட்சி. பேச்சுச் சுதந்திரமோ எழுத்துச் சுதந்திரமோ இல்லை. பிரபலக் கலைஞர்கள் (எழுத்தாளர்கள் உள்பட) 'Internal Immigration' நிலையில் இருப்பதாக என் வார்ஸா பல்கலைக்கழகப் பேராசிரிய நண்பர்கள் என்னிடம் கூறினார்கள். இதன் அர்த்தத்தையும் எனக்கு விளக்கினார்கள்.

ராணுவ அரசாங்கம், 'இன்னதுதான் எழுதலாம், இன்னது எழுதக்கூடாது' என்று ஆணையிடலாமேயன்றி, ஓர் எழுத்தாளரை அவர் எழுதித்தான் ஆகவேண்டுமென்று கட்டளையிட முடியாது. ஓவியர்களைப் படம் வரைய வற்புறுத்த இயலாது. பாடகர்களைப் பாடும்படியாகக் கட்டாயப் படுத்தல் கடினம். இக்கலைஞர்கள் தம் தம் கலை ஆற்றலைத் தமக்குள் ஒடுக்கிக்கொண்டு, அவர்களுடைய திறமைக்குச் சம்பந்தமேயில்லாத பணிகளில் இருப்பதுதான் 'Internal Immigration'. எழுத்தாளர்கள் வாடகை வண்டி ஓட்டினார்கள்; ஓவியர்கள் முடிவெட்டினார்கள்; பன்றி மாமிசம் விற்கும் கடையில் வேலை பார்த்த, பியானோ அருமையாக வாசிக்கும் ஒரு மிகப் பிரபல இசைக் கலைஞரை என் பேராசிரிய நண்பர் ஒருவர் எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.



அப்பொழுது எனக்கு அந்த ஹிந்தி எழுத்தாளரின் எதிர்ப்பு நினைவுக்கு வந்தது. பாவம், பாரத புண்ணிய பூமியில் அவரை யாரும் புரிந்து கொள்ளவில்லை.

ஆனால், போலிஷ் அரசாங்கத்தைப் போலிஷ் கலைஞர்களின் இவ்வெதிர்ப்பு, தார்மீக மனச்சங்கடத்துக்கு உள்ளாக்கியது போல் தெரிந்தது. நேரடியாக அரசாங்கக் கொள்கைகளைத் தாக்கும் கட்டுரைகளுக்கும் விவாதங்களுக்கும்தான் அரசாங்கக் கட்டுப்பாடுகள், மற்றபடி, இக்கட்டுப்பாடு கலைகளுக்கில்லை என்று விதிகள் தளர்த்தப்பட்டன. மாஸ்கோ கரடி அணைப்பிலிருந்த மற்றைய கம்யூனிஸ்ட் நாடுகளில் போலல்லாமல், போலந்தில் 'மனித முகமுடைய கம்யூனிஸ்ட் அரசாங்கம்' என்று சொல்லப்படுவது வழக்கம். ராணுவ ஆட்சி அமுலுக்கு வந்ததும், தொலைப்பேசியில் கருவியை எடுத்ததும், நான் கேட்ட அறிவிப்பு: "நீங்கள் பேசுவது பதிவு செய்யப்படுகிறது. கவனமாகப் பேசுங்கள்" என்பதுதான். அதாவது, 'அரசாங்கத்துக்கு எதிராக ஏதாவது சொல்லி, உங்களைக் கைது செய்யும் தர்ம சங்கடத்துக்கு எங்களை உள்ளாக்காதீர்கள்' என்று அரசு மன்றாடுவது போலிருந்தது.

இக்கால கட்டத்தில்தான், மிகச்சிறந்த போலிஷ் படைப்பாளியாகிய ஸ்லாவொமிர் மிரோசெக்க்கின் 'Meta-Theatre' வகையைச் சார்ந்த அரசியல் அங்கத நாடகங்கள் மீண்டும் மேடையேறத் தொடங்கின. 'Striptease' என்ற அவருடைய நாடகம் குறிப்பிடத்தக்கது.

'அ' என்பவன் ஓர் இலட்சியவாதி, 'ஆ' என்பவன் யதார்த்தவாதி. இருவரும் அதிகார வர்க்கத்தைச் சார்ந்தவர்கள். இருவரும், சந்தர்ப்பவசத்தால், ஜன்னலில்லாத ஓர் அறையில், கண்ணுக்குத் தெரியாத ஓர் ஆளும் சக்தியினால் அடைக்கப்படுகின்றனர். சிறிது நேரம்



மனச் சங்கடத்துக்குள்ளாகிய இருவரும், பிறகு விவாதிக்கத் தொடங்குகின்றனர்.

அவர்கள் விவாதித்த தலைப்பு: 'நமக்குத் தேவையானதைத் தேர்ந்தெடுக்கும் சுதந்திர உணர்வு', 'பய உணர்வு' ஆகியவற்றைப் பற்றியது. அப்பொழுது ஒரு ராட்சசக் கை அவர் அறைக் கதவருகே தோன்றி, அவர்களுடைய உடைகளைத் தரும்படிக் கேட்கின்றது. விவாதச் சூட்டில், அவர்கள் தங்களுடைய ஆடைகளை ஒவ்வொன்றாக, டை, கோட், சட்டை, பனியன், பான்ட் என்று கழற்றித் தன்னிச்சையாகத் தந்துகொண்டே இருக்கின்றனர். அதே சமயத்தில் அவர்கள் விவாதத்தை நிறுத்தவில்லை. (நாட்டில் அக்கிரமம் நடக்கும்போது, செயல்பாடு ஏதுமின்றி, நம் நாட்டில் இப்பொழுது காட்சி ஊடகங்களில் நடக்கும் சூடான விவாதங்களை நினைவுறுத்தக் கூடும்!)

திடீரென்று அவர்களுக்கு அப்பொழுதுதான் உறைக்கின்றது. இருவரும் நிர்வாணமாக இருக்கிறார்கள்! இது ஒரு புது விவாதத்துக்கு அடிகோலுகின்றது. "நான் மனதளவில் கோட்பாடுகளால் நிறைந்திருப்பதினால், உடலைப் பற்றிய நிர்வாணம் ஒரு பெரிய விஷயமில்லை. என் உடைகளிலா என் சுதந்திர உணர்வு இருக்கிறது?" என்கிறான், இலட்சியவாதியாகிய 'அ'.

'ஆ' கூறுகிறான்: "இந்தச் சூழ்நிலையினின்றும் தப்பித்துக் கொள்வதைத்தான் நான் விரும்புகிறேன். இதற்கு எது வேண்டுமானாலும் செய்ய நான் தயார்."

'அ' சொல்லுகிறான்: "சுதந்திரம் என்றால் என்ன? எனக்கு வெளியே போகக்கூடிய வாய்ப்பு இருக்கிறது என்ற என் சுதந்திரத்தை உணர்வதுதான். ஆனால், அப்படி வெளியே போய்விட்டேனானால், போய்விடுதலாகிய செய்கை, போகமுடியும் என்று தொடர்ந்து உணர்ந்துகொண்டே இருக்கின்ற என் கட்டுப்பாடற்ற மன நிலையை முடிவுக்குக் கொண்டு வருவதால், இதுவே என் மனச் சுதந்திரத்தின் தளையாகி, நான் போய்விடுதலாகிய என் செய்கைக்கு அடிமையாகி விடுகின்றேன். 'சுதந்திரம்' என்பதைச் சுதந்திரமில்லாத நிலையில்தான் ஒருவனால் உணர முடியும்."

"நான் என் அகத்தைப் பற்றிய சுதந்திரத்தைப் பற்றிக் கவலைப் படவில்லை. நான் இப்பொழுது வெளியே போக வேண்டும். இதுதான் புற மயமான என் சுதந்திரம்" என்கிறான் 'ஆ'.

அப்பொழுது ஒரு ராட்சசக் கை தோன்றி இருவர்களுடைய கைகளுக்கும் விலங்கிடுகிறது. அகச் சுதந்திரம், புறச் சுதந்திரம் இரண்டும் பறி போன நிலையில், இருவர் தலைகளிலும் கோமாளிக் குல்லாய் போடப்பட்டு, மேடையில் அவர்கள் விழுந்தடித்துக் கொண்டு ஓடுவதுதான் இறுதிக் காட்சி!

தொலைக் காட்சி மூலம், மாஸ்கோவின் ஆணைக்குக் கட்டுப்பட்டு, 'Committed Writing', அதாவது, ஒரு குறிப்பிட்ட சித்தாந்தத்தைச் சார்ந்த படைப்புக்களின் அவசியம் அடிக்கடி வலியுறுத்தப்பட்டது. ஆனால், அது எப்படி நடைமுறையில் செயல்படுத்தப் படுகின்றதுஎன்பதைப் பற்றி அரசாங்கம் அக்கறை கொள்ளவில்லை. அப்பொழுது தொலைக்காட்சியில் ஒரு நாடகத்தில், ஆதாம் வாஷ்கின் கவிதையை ஒரு கதாபாத்திரம் மேற்கோள் காட்டியது, அந்நிகழ்ச்சியைப் பார்த்தவர்களுக்கு ஆச்சரியத்தையும் மகிழ்ச்சியும் அளித்தது.

அக்கவிதை..

நம் தலைவர் அன்றே சொன்னார்
நம் ஆட்சியில் கடல் அமுதமாய் இனிக்குமென்று.
கடல் நீரைக் குடித்து விட்டு
'அமுதம்' 'அமுதம்' என்று கோஷமிடக்
கற்றுக் கொண்டோம்!
சித்தாந்தம் வாழ்க! சித்தாந்தம் வாழ்க!'

அவர்கள் கோஷமிட்டுக் கொண்டே
நம்மிடம் சொன்னார்கள்,
சித்தாந்த ஆட்சியில் விரலை வெட்டிக் கொண்டாலும்
வலிக்காதென்றார்கள்
வெட்டிக்கொண்டோம்.
வலித்தது.
மரணம் சம்பவித்தது,
சித்தாந்தத்துக்கு! ●

**இந்திரா பார்த்தசாரதி**
<parthasarathyindira@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116. Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**


24/7 EMERGENCY CARE
Shri Hospitals
Shri Hospitals
Multi Speciality Hospital with 24 hours Trauma & Critical Care
WHY SHRI HOSPITALS?
Open 24x7
Efficient staff to offer quick assistance
All facilities under one roof
Emergency ambulance services
Dedicated cardiac ambulances
Trained medical personnel
24x7 availability of doctors and medical personnel
Vision
"Quality Health Care by compassionate medical professionals, acceptable and affordable to all "
Mission
To ensure accessible and affordable quality healthcare by compassionate medical professionals to all.
To provide the best clinical outcomes, patient safety & patient satisfaction.
To cultivate an environment of trust, honesty, mutual respect, equality and ethics.
: 103-C, Tamil Sangam Road (Opp. to Tamil Sangam), Sankar Nagar, Salem - 636 007 : 0427 4300027, 4300028 : 77 08 3333 08
: info@shrihospitals.in : www.shrihospitals.in
Contact for more info : TOLL FREE NO: 1800 8 902 902

